215

# புத்தகமும் வித்தகமும்


215
3.57

அருணாசலம்.

O,6NAVI,P
N57
H0414

# புத்தகமும் வித்தகமும்

215
3.57

மு. அருணாசலம்




தமிழ் நூலகம்
திருச்சிற்றம்பலம் - குத்தாலம் வழி

உரிமை பதிவு] 1-3-1957 [விலை ரூபா ஒன்று

O-,6NAVI,P
N57

## உள்ளுறை






சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை - 14

# ஒரு வார்த்தை

"பித்தனும் ஆகப் பின்னும்
  பேயனும் ஆக; நீ இன்று
எத்தனை தீங்கு சொன்னால்
  யாதும் மற்று அவற்றால் நாணேன்;
அத்தனைக்கு என்னை ஒன்றும்
  அறிந்திலை யாகில், நின்று
வித்தகம் பேச வேண்டாம்-
  பணி செய வேண்டும்"—என்றான்.

—சேக்கிழார்

1945ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதி சென்னையை நீங்கி காசி போய்ச் சேர்ந்தேன். அங்கு இரு ஆண்டுகள்; பின் சேவாக் கிராமம், சிதம்பரம், திருச்சிற்றம்பலம் என்று இன்றுவரை சென்னை தவிரப் பல இடங்களில் இருந்துவிட்டேன். இந்த பன்னிரு ஆண்டுகளில் என்னுடைய எழுத்து பெரும்பான்மையும் குழந்தையின் பாராமரிப்பு, காந்தியக் கல்விமுறை ஆகிய துறைகளில் சென்றிருக்கிறது.

1944 வரை சில ஆண்டுகள், தமிழ் இலக்கிய ஆராய்ச்சி, எழுத்து என்பவற்றை ஒரு பொழுதுபோக்காகவே கொண்டிருந்தேன். அந்த நினைவுகள் இப்போதும், பழைய ஜன்ம வாசனை போல், சில சமயம் தோன்றி மறைவதுண்டு. அவ்விதம் தோன்றிய ஒரு தோற்றத்தின் விளைவே இக்கட்டுரைத் தொகுப்பு.

வெறுங் கதைகளைத் தமிழுலகத்தில் குவித்துப் பயனில்லை: மக்கள் வாழ்க்கை முன்னேறவேண்டுமானால், எழுதும் திறமை வாய்ந்தவர்கள் முயன்று எழுதும்போது, தமிழர் அறிவுப் பெருக்கத்துக்கான நூல்களைத்தான் எழுத வேண்டுமேயன்றி, வீண் பொழுதுபோக்குக்கான புத்தகங்களை எழுதக்கூடாது; பொழுதுபோக்க எழுதுவது தமிழுக்கும் சமூகத்துக்கும் பெருந் துரோகம் என்று நான் அக்காலத்

தில் தீவிர எண்ணம் கொண்டிருந்தேன். இன்னும் அதை மாற்றிக் கொள்ளவில்லை. இக்கட்டுரைகளைப் படிக்கும்போது, படிப்பவர் இக் கருத்தை உணர்ந்திருத்தல் நலம். அதனோடு, இக் கட்டுரைகள் எழுதிய காலம், டி. கே. சி. அவர்கள் என் உள்ளத்தை ஆட் கொண்டு, ஓரளவுக்கு என் வாழ்க்கை முழுமையும் தம் மயமாக ஆக்கி யிருந்த காலம்.

இக்கட்டுரைகள் வெளியான காலம், பயங்கரமான யுத்தம் நடந்துகொண்டிருந்த காலம். சென்னையிலும் குண்டுகள் விழுந்தன. யுத்தம் எப்போது முடியும் என்று தெரியாத காலம்.

இத்தொகுப்பின் கடைசிக் கட்டுரை, 1943ஆம் ஆண்டு தமிழில் வெளியான புத்தகங்களைப் பற்றிய பொது விமரிசனமாக 1944 தொடக்கத்தில் வெளியாயிற்று. ஒவ்வோராண்டும் இவ்வாறு செய்ய வேண்டும் என்று எண்ணினேன். அடுத்த ஆண்டிலிருந்து நான் சென்னையில் இல்லாமையால், இவ்வெண்ணம் பின்னர் நிறை வேறவில்லை.

இக்கட்டுரைகளில் ஒவ்வொன்று அணிகலம், தமிழன், தமிழ் முரசு, பாரசாசு, குமரிமலர் ஆகியவற்றிலும், எஞ்சியுள்ளவை சக்தியிலும் வெளிவந்தன. கட்டுரை வேண்டுமென்று என்னைத் தூண்டிய ஆசிரியர்களுக்கு என் நன்றி.

இவற்றுக்குச் சமாதானம், சுந்தரமூர்த்தியிடம் சிவபெருமான் கூறியதாகச் சேக்கிழார் பெருமான் சொல்லியுள்ள பாடல்தான்.

திருச்சிற்றம்பலம்
1-3-1957

மு. அருணாசலம்

# புத்தகமும் வித்தகமும்

## 1. அருங்கலை

கலை என்ற சொல் தமிழ் உலகத்தில் அதிகமாக அடி படுகிறது. எங்கு நோக்கினும் கலையும் கலை விழாவும் கலைப் பற்றும் கலையன்பும் கலைத்தொண்டும் கலை வளர்ச்சியும் கலை முன்னேற்றமுமே காட்சி தருகின்றன. இது பெரிதும் விரும்பத்தக்கதுதான். பொருளிடத்தில் சரண்புகுகின்ற மனப்பான்மை நீங்கி, கலையிடத்தில் சரண்புகும் மனப் பான்மை குடிகொண்டு விட்டதானல், வேறென்ன வேண்டும்?

ஆனல் கலைவளர்ச்சி என்பது பின்பற்றுவது அன்று; கடன் வாங்குவது அன்று. சென்ற காலத்திலே நமக்குரிய தாயிருந்த பழுது இல்லாத சிறப்பு யாது, அதை நிகழ்காலத் தில் புதியதாய் ஓங்கச்செய்வது எவ்விதம் என்று கூர்ந்து நோக்கித் தொண்டு செய்வோரே கலை வளர்ச்சிக்கு உழைப்போராவர்.

நம் நாட்டில், கலைகளுக்கெல்லாம் நாயகமான தெய் வம், பெண் தெய்வம், சரசுவதி, சகலகலாவல்லி. நம் முடைய கலைகள் அறுபத்து நான்கு. 'எண்ணெண் கலை மடந்தை' என்றும், 'ஆயகலைகள் அறுபத்து நான்கினையும், ஏய உணர்விக்கும் என் அம்மை' என்றும் நாம் கலைமகளை வழிபடுகிறோம்.

நம்முடைய கலைகள் அறுபத்து நான்கு என்று இருந்த போதிலும், இவற்றுள் சிலவற்றைச் சிறப்பாகக் கலை யென்ற சொல்லாலே தனிப்படக் கூறுகிறோம். கட்புலனால்

அனுபவிக்கத்தக்கது ஓவியம்; அடுத்தபடி, இன்னும் பூரணமான வடிவம்பெற்ற சிற்பம்; சிற்பமே இயங்குகிறதோ என்று சொல்லத்தக்கதான நடனக்கலை; இவையனைத்தையும்போலல்லாமல், செவிப்புலனல் நுகர்ந்து இன்புறத்தக்க சங்கீதம்; இதற்கு உரிய சாகித்தியம் என்று சொல்லத்தக்க கவிதை—இவை முதலானவற்றையே, இப்போது சிறப்பாகக் கலை என்று கூறுகிறோம். இவைபோல்வனவற்றை நம்மவர் இப்போது, பேச்சிலும் எழுத்திலும், கலை என்று குறிப்பிடுவதோடு அமைவதில்லை; இதற்கு ஓர் அடைமொழி கொடுத்துக் கூறுகிறார்கள். இவ்வடைமொழி பலவிதமான சொற்களால் அமைக்கப் பெறுகிறது.

கலை பற்றிய உணர்ச்சி, அல்லது பேச்சிலும் எழுத்திலும் இன்று காணப்படுகிற எழுச்சியானது, ஆங்கிலத் தொடர்பு காரணமாகவே ஏற்பட்டது என்று சொல்லுதல் எல்லா வகையிலும் பொருந்தும். ஆங்கிலமொழியில், இப்படிப்பட்ட கலைகளுக்கு, பைன்-ஆர்ட்ஸ் (Fine Arts) என்று பெயர் வழங்கும்.

பைன் ஆர்ட் என்ற ஆங்கிலத்தொடரை அமைத்த பெயருடைய கலைச்சங்கங்கள் தமிழ்நாட்டில் எத்தனையோ. இனி, ஆர்ட் என்ற ஆங்கிலச் சொல்லின் பொருள், கலை என்றாகும். அப்படியானல் பைன் (Fine) ஆர்ட் என்றால் பொருள் என்ன?

கலையைக் குறிக்கும்போது, நம்மவர் பலர், பைன் ஆர்ட் என்ற தொடரை மொழிபெயர்த்தே சொல்லுகிறார்கள். பைன் (Fine) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு—நேர்த்தியான, மென்மையான, நுட்பமான என்ற பொருள்கள் உள்ளன. எழுதுவோரும் பேசுவோரும், இந்த அடைமொழிகளை எல்லாம் கலைக்கு முன் சேர்த்துக்கொண்டார்கள். அழகு என்ற கருத்தை யமைத்து ஒருவர், கவின்கலை, எழிற்கலை, அழகுக்கலை என்கிறார்; மற்றவர் நளினகலை, லளிதகலை என்கிறார். கலை என்பதிலேயே அழகு அடக்கம்; எனவே

அழகைத் தனியே குறிப்பிடவேண்டுவதில்லை. நற்கலை எனவும் சிலர் சொல்லுவார்கள். உயர்கலை என்பதும் அப்படியே. நுட்பம் மென்மை என்ற பொருளை வைத்து, வேறு சிலர், நுண்கலை, நுண்மாண்கலை, மென்கலை என்றெல்லாம் கூறுகிறார்கள். சிறப்புக்கலை என்று கூறுவதையும் காண்கிறோம். இத்தொடர்கள் யாவும் அமைப்பளவிலே மொழிபெயர்ப்பு என்று தம்மைக் காட்டிவிடுகின்றன.

இங்ஙனமானால், சிறப்பான இந்தக் கலைகளைப் பற்றிய உணர்ச்சி நம்முன்னோருக்கு இல்லையா? அவர்களை ஆதரித்த வள்ளல்கள் இல்லையா ?—என்ற கேள்விகள் எழுகின்றன. எத்தனையோ பேர் இருந்தார்கள். ஓர் உதாரணம் மட்டும் காட்டலாம்.

நன்னூல் என்ற நல்ல தமிழிலக்கணத்தைச் செய்தவர் பவணந்தி என்ற சமணத் துறவி. இவரை ஆதரித்து இந்த இலக்கண நூல் செய்யுமாறு கேட்டுக்கொண்டவன், சீய கங்கன் என்னும் அரசன். இவன் சிறந்ததோர் கலை வள்ளலாயும் இருந்தான். நன்னூலை அரங்கேற்றியபோது, அதற்குச் சிறப்புப்பாயிரம் தந்த புலவர் இவ்வரசனைப் புகழும் முறை இங்கு அறியத்தக்கது.

**துன்னூர்**
**இகல் அற நூறி இரு நிலம் முழுவதும்**
**தனது எனக் கோரித் தன் மத வாரணம்**
**திசைதொறும் நிறுவிய திறல்உறு தொல் சீர்க்**
**கருங் கழல் வெண் குடைக் கார் நிகர் வண் கைத்**
**திருந்திய செங்கோற் சீயகங்கன்**
**அருங்கலை விநோதன் அமரா பரணன்**
**மொழிந் தனனாக—**

என்பது பாயிரத்தின் பகுதி. சீயகங்கனைப் புலவர் அருங்கலை விநோதன் என்று புகழ்கிறார். இத்தொடருக்கு, அரிய கலைகளை ஆராய்தலே பொழுதுபோக்காக உடையவன்

என்பது பொருளாகும். அருங்கலை என்ற தொடர், இன்றைய வழக்குப்படி பைன்-ஆர்ட் என்ற தொடருக்கு நேரான தமிழ்போல் அமைந்திருக்கிறது. சீயகங்கன், அருங் கலைகளை ஆதரித்து வளர்த்த பெரு வள்ளலாயிருந்தவன்.

எனவே, தமிழ் மரபில் ஊன்றியவர்கள் பைன்-ஆர்ட் என்ற மாத்திரத்தில், கவின்கலை முதலான சொற்கோவை யைத் தேடாமல், அருங்கலை என்ற நினைவு பெறுவார்கள்.

**பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும்**
**பயனும் என்பாற்**
**கூட்டும் படிநின் கடைக்கண் நல்காய் உளங்**
**கொண்டு தொண்டர்**
**தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பால் அமுதம்**
**தெளிக்கும் வண்ணம்**
**காட்டும் வெள்ளோதிமப் பேடே சகல**
**கலா வல்லியே.**

## 2. குறிப்பறிய மாட்டாதவன்

பழமை என்ற காரணத்தினுலேயே, நம்முடைய மனம் சிலவற்றை ஆழ்ந்து சிந்திக்க மறுத்துவிடுகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக, எல்லோரும் அறிந்த ஒரு பாட்டைச் சொல்ல எண்ணுகிறேன்.

உணர்ச்சியே இல்லாமல் இருப்பதற்கு உதாரணமாக நாம் சாதாரணமாய்ப் பேச்சு வழக்கில் மரத்தைச் சொல்லு கிருேம்; மரம் என்று இப்படி சொல்லும்போது, மரக் கட்டைதான் நம்முடைய ஞாபகத்துக்கு வருகிறது. 'மண் ணேடு இயைந்த மரத்தனையர், கண்ணேடு இயைந்து கண்ணேடாதவர்' என்பது முதலாகப் பல சந்தர்ப்பங் களில், திருவள்ளுவர் மனிதனை மரமென்றே சொல்கிருர். மாணிக்கவாசகர் தம்மை இழித்துக் கூறும்போது, தம் நெஞ்சம், பராய் மரத்தின் கணுப்போல் கடினமானது, தம் கண்ணும், மரத்தைப்போல் உணர்ச்சியற்றுப் பார்க்கும் தன்மையும் அற்றது என்று கூறுகிருர்; 'வன் பராய் முருடு ஒக்கும் என் சிந்தை மரக் கண்' என்பது அவருடைய பாடல்.

ஔவையாரும் இப்படி ஒரு சமயம் அழகான நல்ல மரமொன்றைப் பார்த்தார். காட்டிலும் தோட்டத்திலும் எத்தனையோ மரங்கள் இருக்கின்றன. இவற்றைப் பலர் மரம் என்று சொல்லுகிருர்கள்; இவை, கப்பும் கிளையுமாகப் பார்க்க எவ்வளவோ அழகாயுள்ளன. உலகத்திலுள்ள வேறு சில நல்ல மரங்களைக் கவனிக்கும்போது, இப்படி அழகான காட்சி தருகிற தாவர உயிரினத்தை மரமென்று சொல்லவேண்டாமே என்று அவர் கருதுகிருர். அப்படி அவர் கண்ட நல்ல மரம் எது? 'எண்ணும் எழுத்தும் கண் ணெனத் தகும்' என்பது ஔவையார் சொன்ன ஒரு வாசகம். ஆகவே, படிக்கத் தெரிவது, ஒருவன் கண் பெற்

றிருப்பதை ஒத்ததாகும். ஒருவன் படிக்கத் தெரிந்தவன் என்ருல், விசேஷமாக அவன் எதையேனும் அறிந்தவன் என்பது பொருளாகாது. புறக்கண் அவனுக்கு இருக்கிறது என்றே பொருளாகும். ஆகவே, ஒன்றை ஒருவன் வாசிக்கிருன் என்ருல், அது ஒரு பெரிய காரியமாகாது. புறக்கண் அவனுக்குத் தொழிற்படுகிறது என்பதே அதனுல் நாம் அறிகிருேம்.

மனிதன் ஆறறிவுடையவன். ஆருவது அறிவாவது, சிந்தித்துப் பகுத்துணரும் திறனுகும். சிந்தித்துப் பகுத்துணரும் திறன் - அதாவது, கண்ட, கேட்ட, படித்த ஒரு விஷயத்தின் குறிப்பை அறியும் திறன் - இல்லாதவன் மனிதன் என்று பிறப்பினுலே நாம் சொன்னபோதிலும்கூட, மனிதனுகான், இன்னும் கீழான உயிர்வர்க்கந்தான் என்று ஒளவையார் கூறுகிருர்.

குறிப்பறிவது சம்பந்தமாக, சிறு பிள்ளைகளுக்குப் போடும் கணக்கொன்றை இங்கு ஞாபகப்படுத்திக் கொண்டால், நான் சொல்லுவது எளிதாக விளங்கும். சிறுவனுடன் கூடிப் பழகி நண்பராயுள்ள மாமா, ஒரு விளையாட்டுக் கணக்குப் போடுகிருர். 'ஒரு மரத்தில் நூறு காக்கைகள் உட்கார்ந்திருந்தன. ஒரு வேடன் குறிபார்த்து ஓர் அம்பு விட்டான். காக்கை ஒன்று அடிபட்டு விழுந்துவிட்டது. மிச்சம் எத்தனை காக்கை இருக்கும்?'

தொண்ணூற்றென்பது காக்கை என்று சொல்லுகிருன், யோசனை செய்யாத பையன். அவனுடைய கழித்தல் கணக்கு சரிதான், தப்பு இல்லை; நூற்றில் ஒன்று குறைந்தால் தொண்ணூற்றென்பதுதான். ஆனுல், பையன் கொஞ்சம் யோசனை செய்திருந்தானுனுல், வேறு விடை கூறியிருப்பான். 'ஒரு காக்கை அடிபட்டவுடனே, மற்றவை இருக்குமா? பறந்தல்லவா ஓடிவிடும்?' என்று கணக்கின் குறிப்பை எண்ணிப் பார்த்திருந்தானுனுல், இப்படி விடை கூறியிருக்கமாட்டான்.

இதே விதமாக, படிப்பதிலும், குறிப்பறிவது உண்டு. அகப்பொருள் படித்தவர்கள் இதை விரிவாய் அறிவார்கள். குறிப்பறிதல் என்பதன் சிறப்பை நோக்கிக் குறளாசிரியரும் இதற்குக் குறளில் இரண்டு அதிகாரங்கள் தந்திருக்கிறார்.

வாசித்தால்மட்டும் போதாது, வாசித்ததன் குறிப்பை உணர்தல்வேண்டும் என்று ஔவையார் கூறுகிறார். வாசித்துவிட்டு, வாசித்ததன் குறிப்பையறியாமல் விழிப்பவனே நல்ல மரம் என்று அவர் கூறுகிறார் :

**கவையாகிக் கொம்பாகிக்**
**காட்டகத்தே நிற்கும்**
**அவை யல்ல நல்ல**
**மரங்கள் ;—சபை நடுவே**
**நீட்டோலை வாசியா**
**நின்றான், குறிப்பறிய**
**மாட்டாதவன் நன் மரம்.**

கிளைகளைப் பெற்றும், கொம்புகளைப் பெற்றும், காட்டின் நடுவே வாழ்கின்ற மரங்கள் எல்லாம் நல்ல மரங்கள் ஆக மாட்டா; ஆனால் தக்க சபையின் மத்தியில் ஒருவர் நீட்டிய ஓலையை ஒருவன் வாசித்துவிட்டு, அதன் குறிப்பையுணராது விழிப்பானானால், அவனே நல்ல மரமாகிறான் என்று இப் பாட்டுக்குப் பொழிப்புரை கூறலாம்.

ஆனால் 'பண்டு' தொடங்கி, இப்பாட்டுக்கு எல்லோரும் வேறுவிதமாகவே பொருள் கூறிவருகிறார்கள். 'சபை நடுவே—கற்றோர் சபையின் நடுவே, நீட்டிய ஓலை—ஒருவர் நீட்டிய ஓலையை, வாசியா நின்றான்—வாசிக்கமாட்டாமல் நின்றவனும், குறிப்பை அறியமாட்டாதவன் — பிறர் குறிப்பை அறியமாட்டாதவனுமே, நல்ல மரம்—நல்ல மரங்களாம்' என்று பெரியவர்கள் பொருள் கூறிவந்திருக்கிறார்கள்.

இதில் பலவகை ஆட்சேபங்கள். ‘கற்றோர் சபை நடுவே’ என்று சொல்லிய பிறகு, அங்கே ஒருவன் ‘வாசிக்க மாட்டாமல்’ நிற்பானா? நிற்கும் நிலையிலுள்ளவன் அங்கு வருவானா? அவனுக்குக் கற்றோர் சபை நடுவே இடமுண்டா? பிறர் குறிப்பை என்று சொல்லும்போது, பாட்டில் விஷயத்தொடர்பு இல்லாமற் போய் விடுகிறதே! தவிர, நல்ல மரம் என்று சொல்லுமிடத்து, ஒன்றைச் சொன்னால்தான் சுவையும் வேகமும் பிறக்குமே தவிர, மற்றொன்றைச் சேர்த்து இரண்டாக்கிச் சொன்னால், சுவை கெடுகிறது.

கிறு, கின்று, ஆநின்று என்பன மூன்றும் நிகழ்கால இடைநிலைகள். எனவே, ‘வாசியா நின்றான் குறிப்பறிய மாட்டாதவன்’ என்பதை, ‘வாசித்து, குறிப்பறிய மாட்டா தவன்’ என்று பொருள் கொள்வதே, சிறப்புடையதாகும்.

‘வாசியாமல் நின்றவனும், குறிப்பறியமாட்டாதவனும்’ என்று கூறும் பொருள், தொண்ணூற்றொன்பது காக்கை என்று கூறுவதோடொப்ப, கணித சாஸ்திரப்படியும் சம்பிரதாயப்படியும், சரியான பொருள்தான்; ஆனால் குறிப்பறியமாட்டாத பொருள்.

# 3. யார் அறிவார் தமிழருமை

**சமீ**பத்தில் என் உறவினர் ஒருவர் வீட்டுக்குப் போயிருந்தேன். திரும்புகிற சமயம், அவசரத்தில், "உங்கள் வீட்டில் ஏடுகள் இருக்கின்றனவா? என்று கேட்டு வைத்தேன்.

" இருக்கும் " என்றார் அவர்.

" பார்க்கலாமா ?" என்றேன்.

" பார்க்காமலென்ன, பார்க்கலாம்."

" கொண்டுவரச் சொல்லுங்கள்."

" அதெல்லாம் இப்போது நீ ஊருக்குப் போகிற அவசரத்தில் முடியாது. இன்னொரு சமயம் சாவகாசமாக வா. பார்த்துக்கொள்ளலாம் " என்றார்.

நான் கொஞ்சம் தயங்கி நின்றேன். ஏன் முடியாது என்று கேட்க வாயெடுத்து நான் கேட்பதற்குள் அவர் சொல்லலானார். "ஏடுகளெல்லாம் ஒரு பழைய பிரப்பம் பெட்டியில் போட்டுப் பரணில் ஏற்றினதுதான். அப்புறம் யார் அதைப் பார்த்தார்கள்? இரண்டு ஆள் இருந்து பெட்டியைக் கீழிறக்க வேண்டும். பிறகு பெட்டியைத் திறந்து அதிலுள்ள தேள், கரப்பான், பூரான், பாச்சை முதலியவற்றை ஓட்டவேண்டும். பிறகு ஏடுகளைத் துடைக்க வேண்டும். துடைத்தபின் தான் கையால் தொடலாம். தொட்டுப் பார்த்தால் என்ன நிலையில் இருக்குமோ, யார் கண்டார்கள்? ஆகவே தான் இன்னொரு நாளைக்கு வா, பார்க்கலாம் என்றேன்" என்று விளக்கிச் சொன்னார்.

அதற்குமேல் பேசுவதற்கு ஒன்றுமில்லை. ஆகவே அன்று போய்விட்டு ஒழிந்தபோது ஒரு வாரம் கழித்து ஒரு நாள் வந்தேன். வந்து பரணிலிருந்த பிரப்பம் பெட்டியைக் கீழே இறக்கித் திறக்கச் செய்து உள்ளிருந்த ஏடுகளையெல்லாம் எடுத்துத் துடைத்தேன். பல ஏட்டுப் பிரதிகள் நல்ல நிலைமையிலிருந்தன. வேறு பல தூளாகிப் போய்ப்

பயன்படக் கூடாத நிலைமையிலிருந்தன. முக்கியமான புராணங்களில் சில-விருத்தாசலம், அருணகிரி, கோயில் புராணம் முதலியன, கந்தபுராணம், திருவிளையாடல், பெரியபுராணம், போன்றன, தேவார திருவாசகங்கள், சித்தாந்த சாத்திரங்கள், குறள் பரிமேலழகருரை முதலியன, நல்ல நிலைமையில் கண்டேன். ஆனால் திவாகரம் சித்தியார் உரைகள் போன்ற சில நூல்கள் முன்னமே அங்கு நல்ல நிலைமையிலிருந்திருந்து பின்னர் தூளாகிக் கெட்டுப்போன காரணத்தால் ஆற்றில் போட்டுவிட்டார்கள் போலிருக்கிறது. இவற்றின் தூளான ஒற்றையேடுகளை மட்டுமே கண்டேன்.

சில ஏடுகளைப் பிரித்துப் படித்துப் பார்த்தேன். "பூவனுட...பிள்ளை குமாரர் குமாரசாமிப்பிள்ளைக்குப் பந்தநல்லூர் சந்திரசேகர உபாத்தியாயர் எழுதியது...ஸு...மீ ......உ" என்றெல்லாம் விவரங்கள் எழுதப்பெற்றிருந்தன.

இவற்றைப் பார்த்தபோது, ஏடுகளைப்பற்றிய பல உண்மைகள் எனக்கு நினைவு வந்தன. பெரிய குடும்பங்களில் செய்து வந்த பலவகைத் தருமங்களில், ஏடுகளைப் பிரதி செய்விப்பதும் ஒரு தருமமாகக் கருதிச் செய்து வந்திருக்கிறார்கள். நல்ல செல்வ நிலையிலிருந்த பெரியோர்கள், முற்காலத்தில் ஏடெழுத வல்ல கணக்காயர்களைக் கொண்டு நூல்களையும் புராணங்களையும் பிரதி செய்வித்தார்கள். முக்கியமான எல்லா நூல்களும் தங்கள் வீட்டில் இருக்க வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு இருந்தது. அச்சுப்புத்தகம் தோன்றாத காலமல்லவா? ஏடெழுதுவோருக்குச் சொற்ப சம்பளமே அக்காலத்தில் போதுமானதாயிருந்தது; மற்றப்படி, மூன்றுவேளை சாப்பாடு செய்வித்தாலே போதும். இருபத்தைந்து ஏடு எழுதினால் நாலு பணம் கூலி என்பது ஒரு காலத்தில் வழக்கம். இப்படியாக, கூலிக்கு எழுதி வாங்கி வைப்பதே செல்வர்களுக்குப் பழக்கமான காரணத்தால்தான் பல நூல்கள் இறந்து போகாமல் இக்காலத்தில் கிடைக்கின்றன.

இதை எண்ணியபோது நம்முடைய காலத்தில் இப்போது நிகழ்ந்த நிகழ்ச்சி யொன்று ஞாபகம் வந்தது. நாவல்களும் கதைப்புத்தகங்களும் தமிழில் ஏராளமாய்ப் பெருகிவிட்டன. எழுத்தாளன் என்ற தொழிலாளியும் இப்போது முளைத்துவிட்டான். ஆனால் சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னேயும் தமிழ் நாட்டில் எழுத்தாளன் என்ற தொழிலாளி இருந்திருக்கிறான். அப்போது தமிழ் நாட்டில் ஒரு மாதப் பத்திரிகை இருந்தது (அது இன்னும் இருந்து வருகிறது.) அதன் ஆசிரியர் கெட்டிக்காரரான ஓர் எழுத்தாளரைப் பிடித்தார். எழுத்தாளரல்ல – மொழிபெயர்ப்பாளர் என்றும் இவரைச்சொல்லலாம். இவர் பெயர் பூரணி சுப்புசாமி முதலியார் என்று சொல்வோம். பத்திரிகாசிரியர் இவரைக் கொண்டு வந்து ஓர் அறையில் விட்டு அதில் வேண்டிய காகிதம் பேனா மைக் கூடும் வைத்துப் பூட்டி விடுவார். கையில் ரெய்னால்ட்ஸ் நாவலொன்றைப் பிடித்தபடி சுப்புசாமி உட்கார்ந்தாரானால் பேனாபாட்டுக்கு ஓடிக்கொண்டேயிருக்கும். சுமார் நூறு அல்லது இருநூறு பக்கம் ஓடின பிறகு நின்று விடும். நிற்பது மையில்லாத காரணத்தாலல்ல. சுப்புசாமிக்குப் பசி என்று அர்த்தம். அது என்ன பசி என்பது, அறையைப் பூட்டிக்கொண்டு போன பத்திரிகாசிரியருக்குத் தெரியும். மணிக் கணக்குப்படி வந்து அவர் கதவைத் திறப்பார். திறந்து, சுப்புசாமியின் பசி தீர்க்கும் மருந்தைத் தருவார். அது என்ன மருந்து? ஒரு பாட்டில் கள்ளு! மருந்து உள்ளே வந்ததோ இல்லையோ, சுப்புசாமி இன்னும் இருநூறு பக்கம் எழுதி முடித்து விடுவார். மாலை ஆறுமணிக்கு அவரை வெளியே விடும்போது அவர் கையில் ஒரு எட்டணா நாணயத்தைக் கொடுத்தனுப்புவார் பத்திரிகாசிரியர்.

இது இந்த இருபதாம் நூற்றாண்டில் நடந்தது. கள்ளின் உதவியால் சுமார் இருபது, முப்பது, நாவல்கள்

தமிழில் வெளிவந்தன. நான் சொல்லுகிற இந்த வரலாறு ஒன்றும் புதிதல்ல. பலருக்கும் தெரிந்ததுதான்.

ஏடுகள் பொடிந்து போனதனுல் பலவற்றை ஆற்றில் எறிந்து விட்டார்கள் என்று நான் மேலே கூறியபோது, சாமிநாத ஐயரவர்கள் தம் சரித்திரத்தில் சொல்லும் நிகழ்ச்சி யொன்று நினைவுக்கு வரும்.

பெரிய பிரபு ஒருவர் வீட்டிற்கு ஐயரவர்கள் ஏடு தேடச் சென்ருர். ஏடு இருக்கிறதா என்று பிரபுவைக் கேட்டார். " முன்னமே இருந்தது " என்ருர் அவர்

" இப்போது எங்கே?"

" இப்போது இல்லை. அவற்றை எல்லாம் செய்ய வேண்டியபடி செய்து விட்டேன்."

" செய்யவேண்டியது என்ன ? நீங்கள் என்ன செய் தீர்கள் ?"

" நெய்யிலே ஏடுகளைத் தோய்த்து ஹோமத்திலே ஆகுதி செய்ய வேண்டுமென்று சாஸ்திரத்திலே சொல்லி யிருக்கிறது. அந்தப்படியே அவைகளைச் செய்து விட் டேன்."

நூல்களின் அருமை தெரியாமல், ஏட்டின் அருமை யுணராமல், இவர் அவற்றைத் தீயில் போட்டு விட்டதற்கு, பாவம், சாஸ்திரத்தை வேறு இவர் துணைக்குக் கூப்பிடுகிருர்!

இப்படியாக, ஏட்டுப் பிரதிகளைப் பலவகையில் ஆகுதி செய்த கதைகள் தமிழ் நாட்டில் ஏராளம். வையாபுரிப் பிள்ளையவர்கள் ஓர் அரிய அனுபவத்தைக் கூறினுர்கள். ஒரு கவிராயர் வீட்டில் கிடைத்தற்கரிய ஓர் ஏட்டைக் கண்டார் கள். வீட்டுக்காரர்களோ, அதைக் கொடுக்க மறுத்து விட்டார்கள். பிள்ளையவர்களுக்கோ, சென்னை வரவேண் டிய அவசர வேலை இருந்தபடியால் இருந்து நிதானமாக அவ்வேட்டை முழுதும் பார்க்க முடியவில்லை. ஆகவே அடுத்த வருஷம் வந்து பார்த்துக்கொள்வதாகச் சொல்லி விட்டு வந்து விட்டார்கள். அடுத்த வருஷம் போனுர்கள்.

"ஏடுகள் கறையான் பிடிக்க ஆரம்பித்து விட்டன. ஏன் இந்த உபத்திரவம் என்று அவற்றை யெல்லாம் ஆற்றில் போட்டுவிட்டோம்" என்று கவிராயர் வீட்டார் சொன்னார்கள். நியாயந்தானே?

பத்திரிகைகளுக்கு எழுதிப் பழக்க முள்ளவர்களுக்கு இதையொட்டிய ஓர் அனுபவம் ஏற்பட்டிருக்கும். மிகவும் வேண்டியவரான ஒரு பத்திரிகாசிரியர் கட்டுரை கேட்பார். சரியென்று ஒன்று எழுதி யனுப்புவோம். சீக்கிரத்தில் வெளியாகப் போகிற தென்று நினைப்பு நமக்கு. ஆனால் பத்து நாள் கழித்து, "இன்னும் ஏன் கட்டுரை அனுப்பவில்லை" என்று ஆசிரியர் டெலிபோனில் கேட்பார். அல்லது கடிதம் எழுதுவார். கட்டுரை உரிய காலத்தில் எழுதியனுப்பிய நமக்கு எப்படியிருக்கும்? எழுதியதற்கு நகலும் நம்மிடத்தில் இராது. இப்படிப்பட்ட அனுபவம் அனேக எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டிருக்கும்.

ஆரம்பத்தில் தொடங்கிய வரலாற்றைப் பூர்த்திசெய்து விடுகிறேன். உறவினர் வீட்டில் ஏடுகளை யெல்லாம் புரட்டிப் பார்த்து முடித்துவிட்டு அன்று சாயங்காலம் வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். என் வேலைகளை யெல்லாம் முடித்துவிட்டு இரவு படுக்கப்போகும் சமயம் தமிழ்ப் பாட்டு ஏதேனும் படிக்கலாமென்ற எண்ணத்தோடு ஒரு சிறு புத்தகத்தைக் கையில் எடுத்தேன். அதில் ஒரு பாட்டுக் கண்ணில் பட்டது. ஒரு பாட்டுக்கூட இல்லை; பாட்டின் மூன்றாவது வரிதான் எடுத்தவுடனே கண்ணில் பட்டது.

**யார் அறிவார் தமிழருமை**
**என்கின்றேன்—என்**
**அறியாமை அன்றோ?**

என்பது வரி. தமிழ் ஏடுகளையும் அவற்றின் நிலைமையையும் பார்த்துவிட்டு இவற்றையே சிந்தித்துக்கொண்டு வந்த எனக்கு இந்த வரி தென்பட்டதும் ஒரு வேடிக்கைதானே?

என்ன சந்தர்ப்பத்தில் ஆசிரியர் இதைப் பாடினர் என்பதையும் தெரிந்துகொள்ளலாமல்லவா?

அடியவரொருவர் மதுரை நகருக்குச் சென்று இறைவனை வழிபட்டார்; சோமசுந்தரக் கடவுள்மீது ஓர் அந்தாதியும் பாடினர்.

தமிழினிடத்தில் இவருக்கு மிக்க ஈடுபாடுண்டு. மதுரையில் பாண்டிய மன்னர்கள் தமிழ்ச் சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்தது, தமிழுக்காகச் சோமசுந்தரக் கடவுள் பல திருவிளையாடல்கள் செய்தது, வைகை யாற்றிலே சம்பந்தருடைய தமிழ்ப் பதிக மெழுதிய ஏடு எதிரேறிச் சென்றது, சம்பந்தர் நெருப்பிலிட்ட ஏடு வேகாமல் பச்சென்றிருந்தது—இவை முதலான பல கதைகளையும் அவர் எண்ணினர். தம் காலத்திலிருந்த தமிழ் மக்கள் தமிழை அவ்வளவாகப் போற்றாத குறையையும் எண்ணி வருந்தினர். தம் வருத்தத்தைப் பாட்டாகவும் அழகாகச் சொல்லி விட்டார் :

**யார் அறிவார் தமிழருமை என்கின்றேன் என்**
**அறியாமை அன்றோ ? மதுரை மூதூர்**
**நீர் அறியும் நெருப்பறியும் அறிவுண்டாக்கி**
**நீ அறிவித்தால் அறியும் நிலமுந்தானே**

என்று பாடினர்.

ஆம். இந்த எண்ணங்களை யெல்லாம் மனத்தில் இருத்தி, தமிழையும் தமிழிலுள்ள அரிய அருட்பாசுரங்களையும் நன்றாக அனுபவித்து, இவற்றைக் கடவுளோடு தொடர்பு படுத்தி அவர் இப்படிப் பாடினர். தமிழருமை யாருக்குத் தெரியும் என்று சொன்னது தவறு, தமிழருமை யாருக்குத் தான் தெரியாது? நீரும் நெருப்பும் நிலமும்கூட அறியுமே என்று அவர் பக்தியோடு சொன்னர்.

ஆனல் இதையே எனக்கு வேறுவிதமாய்ச் சொல்லத் தோன்றுகிறது. ‘மதுரை மூதூர் நீர் அறியும் நெருப்பு அறி

யும் தமிழின் அருமையை' என்று சொன்னாரல்லவா? உண்மை. குமரிமுனைக்குத் தெற்கே, கபாடபுரமும் தென் மதுரையும் இருந்து, முறையே இடைச்சங்கத்தையும் முதற் சங்கத்தையும் தோற்றுவித்துத் தமிழை வளர்த்தன என்று தமிழாராய்ச்சியாளர் கூறுகிறார்கள். இச்சங்கங்களுக் குரிய நூல்களான அகத்தியம் முதலான எத்தனையோ அரிய தமிழ் நூல்கள் கடல் கொள்ளப்பட்டன என்றும் கூறுகிறார்கள். எனவே, கடலானது அருமையை அதிகமாய் உணர்ந்து, தென் மதுரையிலும் கபாடபுரத்திலும், தமிழரு மையை அனுபவிக்க முற்பட்டது காரணமாக, அவ்வூர்கள் அழிந்தன, அந்நூல்களும் கடல் வயிற்றினுள்ளே அடங்கி விட்டன என்று ஏன் கருதக்கூடாது? நீர் அறியும் என்ப தற்கு இது நேர் பொருள்தானே?

மதுரையில் இப்போதும் தமிழ்ச் சங்கமொன்றிருக் கிறது. அரிய தமிழ் நூல்களை வெளியிட்டும் மாணவர்களைப் பயிற்றுவித்தும் பரீட்சை நடத்தியும் பத்திரிகை வெளியிட் டும் இச்சங்கம் தமிழ் வளர்த்து வருகிறது. சில வருஷங் களுக்கு முன்னால், தமிழினிடத்து நெருப்புக்குக் காதலுண் டாகி, இந்தத் தமிழ்ச் சங்கத்திலிருந்த தமிழ்ப் புத்தகசாலைச் சுவடியில் ஒரு பகுதியை உண்டுவிட்டது. எனவே, மதுரை மூதூர் நெருப்பறியும் என்று கவிஞர் கூறியது பொருத்தந் தானே?

நீ அறிவித்தால் நிலமும் அறியும் என்றார். சிதம்பரத் தில் நடராஜப்பெருமான் அருகில் சேமிக்கப் பெற்றிருந்த தேவாரச் சுவடிகளை மண்மூடி வந்து பதினாயிரக்கணக்கான தேவாரப் பாடல்கள் போய்விட்டன என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. போனவற்றுக்காகக் கவலைப் பட்ட சோழ மன்னனிடம், "இருப்பவை இந்தக் காலத் துக்குப் போதும், இவற்றை நீ வைத்துக்கொள்" என்று நடராஜப்பெருமான் ஆறுதல் கூறினாராம். ஆகவே, இங்கே

நிலமானது தமிழின் அருமையை அறிந்துவிட்டது; நடரா ஜப்பெருமான் அறிவித்தாரா என்பது நமக்குத் தெரியாது.

**யார் அறிவார் தமிழருமை**
**என்கின் றேன் ;என்**
**அறியாமை அன்ருே ?**
**மதுரை மூதூர்**
**நீர் அறியும், நெருப்பு அறியும்,**
**அறிவுண்டாக்கி**
**நீ அறிவித்தால் அறியும்**
**நிலமுந் தானே !**

என்று கவிஞர் பாடியது முற்றும் பொருத்தந்தானல்லவா?

# 4 உரிமையுரை

சில வருஷங்களுக்கு முன்னே தேசிகவிநாயகம் பிள்ளையவர்களுடைய பாடல்களைத் தொகுத்து, மலரும் மாலையும் என்ற பெயரோடு வெளியிட்டோம். அப்போது, புத்தகத்தில் உரிமையுரையொன்று இருக்கவேண்டுமென்று கருதி, அவர்களுக்கு எழுதினேன். சில தினங்களில் அவர்களிடமிருந்து உரிமையுரை வந்தது. எப்படிப்பட்ட உரிமையுரை? யாருக்குப் புத்தகத்தை உரிமையாக்கி யிருந்தார்கள்?

" செந்தமிழ் நாட்டுச்
சிறுவர் சிறுமியர்க்கு
இந்த நூல் உரியதாய்
என்றும் வாழ்கவே.
—சி. தேசிகவிநாயகன் "

என்பது அந்த உரிமையுரை. இதை அப்படியே அவர்கள் கையெழுத்தோடு படமெடுத்து, புத்தகத்தின் முதல் இரண்டாம் பதிப்புக்களில் போட்டிருக்கக் காணலாம்.

எப்படிப்பட்ட உரிமையுரை! இதைப் பார்க்கும்போது கிறிஸ்து பெருமானின் திருவாக்குத்தான் ஞாபகம் வருகிறது. ஒரு குழந்தையை எதிரில் நிறுத்தி, தம் சீடர்களிடம், "நீங்கள் மனம் மாறிச் சிறு குழந்தைகள்போல் ஆனாலன்றி, சொர்க்கலோகத்தில் நீங்கள் பிரவேசிக்க முடியாது. எவனொருவன் இந்தச் சிறு குழந்தைபோலப் பணிந்து போகிறானோ, அவனே சொர்க்கலோகத்தில் பெரியவனாகிறான்" என்று அவர் சொன்னார்.

கிறிஸ்து சொல்லியதை நாமும் சொல்லலாம். ஆனால், அந்தக் குழந்தையுள்ளம் பெறுதல் அரிது. 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தே' என்பது நமது பழமொழி என்று எடுத்துக்காட்டலாம். ஆனால், அவ்வளவு

எளிதில் கொண்டாட வருமா? தேசிகவிநாயகம் பிள்ளையவர்களுக்கு இப்படிக் கொண்டாடுகிற உள்ளம் அமைந்திருக்கிறது. இப்படிப்பட்ட உள்ளமல்லவா, இந்த அருமையான உரிமையுரையைக் கூறிற்று!

இந்த உரிமையுரையை நினைத்தபோது, வேறு எத்தனையோ உரிமையுரைகள் ஞாபகம் வந்தன. அவற்றிலெல்லாம் இப்படிப்பட்ட உள்ளக்கிளர்ச்சியை எதிர்பார்க்க முடியாது. எனினும், அவற்ருல் விளையும் வேடிக்கையையும் நகைச்சுவையையும், சில சமயம் பொருள் ஆழத்தையும் நாம் அனுபவிக்கலாமல்லவா?

நம் நாட்டில் உரிமையுரை சொல்லுகிற வழக்கமெல்லாம் இப்போது மேலைநாட்டுப் பழக்கத்தால் வந்தது என்பது வெளிப்படை. கொஞ்சகாலத்துக்கு முன்னெல்லாம் மேலைநாட்டில் புத்தகம் வெளியிட்டோர் யாரேனும் ஒரு வள்ளலின் ஆதரவு கொண்டுதான் வெளியிடுவார்கள். இந்த முறையிலே பார்த்தால் நம்முடைய நாட்டில் புத்தகங்களுக்கு அருமையான உரிமையுரை வழங்கி யிருக்கிருர்கள்.

பெருங் காவியமான இராமாயணத்தைக் கம்பர் சடையப்ப வள்ளலுக்கு உரிமையாக்கினர். ஆனல், எவ்வளவு புதிய அரிய முறையிலே உரிமையாக்கினர்!

நம்முடைய நாட்டில் முன்னெல்லாம், புத்தகமெழுதினவர்கள் தங்கள் கருத்துப் பரவவேண்டுமென்று ஆசைப்பட்டார்களே யொழிய, தங்கள் பெயர் பரவவேண்டுமென்று ஆசைப்படவில்லை. எனவே, நூற்றுக்கணக்கான நூல்களுக்கு ஆசிரியர் பெயரே தெரியாதபோது, உரிமையுரையைப் பற்றிப் பேச இடமேது?

வடமொழி இலக்கியத்தில் பார்த்தால், யாரேனும் ஒரு புலவர் நூல் எழுதி, அதைத் தமது வள்ளல் பெயராலேயே வெளிப்படுத்திப் பரவச் செய்வது வழக்கமாம். தமிழிலும் இதற்கு உதாரணங்கள் உள்ளன. இன்று எங்கும் வழக்கிலுள்ள குசேலோபாக்கியானம் என்ற அழகான தமிழ்ச்

சிறு காப்பியத்தை, மகாவித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடி, தமது மாணுக்கரும் வள்ளலுமான வல்லூர்த் தேவராச பிள்ளையவர்கள் பெயரில் வழங்கும் படியாகவே கொடுத்துவிட்டார்கள் என்று காலஞ்சென்ற மகாமகோபாத்தியாய டாக்டர் சாமிநாதையரவர்கள் எழுதியிருக்கிறுர்கள்.

சர்வகலாசாலைத் தமிழ்ப் பாட புத்தகங்கள் நிர்ணயிக்கும் சபைகளில் அங்கத்தினரா யிருப்போருக்கும் இந்த உண்மைகள் பல தெரியும். எத்தனை தமிழ்ப் புலவர்கள் புத்தகம் எழுதி, அதைத் தக்க ஆசிரியர்கள் அல்லது பிரபுக்கள் பெயரால் வெளிப்படுத்தி, இதனல் பெற்ற செல்வாக்குக் காரணமாய், அதைப் பாட புத்தகமாக, பாவம், சிறுபிள்ளைகள் தலையில் சுமத்துகிறுர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும்; விவரிக்க வேண்டியதில்லை. புத்தகத்தையே இன்னெருவர் பெயரில் வெளியிடும்போது, உரிமையுரை கூறுவதா பெரிய காரியம்?

இங்கிலாந்தில், முன்னமே உரிமையுரை கூறுவதென்றுல், கூறப்பெற்றவரிடமிருந்து ஆசிரியர் சம்பாவனை எதிர்பார்க்கிறுர் என்பதுதான் அர்த்தமாம். 16ஆம் நூற்றுண்டிலிருந்த அரசியான எலிஸபெத் என்பவளுக்கு ஒரு புலவர் சமய சம்பந்தமான நூலொன்றை உரிமையாக்கினர். அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. "நான் செய்யச் சொன்ன வேலைகளுக்குப் பணம் கொடுப்பதே பெரிய காரியமாகிவிட்டது; சொல்லாத இப்படிப்பட்ட வேலைகளுக்கெல்லாம் எங்கிருந்து பணம் கொடுப்பது?" என்று இரைந்தாளாம்.

இதே புலவர் வேறொரு சமயம் ஒரு புத்தகத்தைத் தோல் வியாபாரியொருவருக்கு உரிமையாக்கியதற்காக, இரண்டரை ஷில்லிங்தான் பரிசாய்க் கிடைத்ததாம்.

நம்முடைய நாட்டில் வள்ளல்களையெல்லாம் காத்தற் கடவுளாகிய திருமாலுக்கு ஒப்பிட்டுச் சொல்வது வழக்கம்.

இவ்வாறு தெய்வமென்றே வள்ளலைப் புகழ்வது எல்லா நாடுகளிலும் காணப்படுகிற வழக்கந்தான். ஒரு சமயம், குருக்களொருவர், தம்மரசனை முதலாம் ஜேம்ஸிடம் கொண்டிருந்த பக்தியைவிடக் கடவுளிடம் அதிக பக்தி கொண்டிருந்ததாகத் தோன்றியது காரணமாக, அரசனிடம் போய் மன்னிப்புக் கேட்கவேண்டி யிருந்ததாம். இரணியன் கதையை இது நமக்கு ஞாபகமூட்டுகிறது.

உரிமையுரை கூறிப் பணம் கேட்பது வழக்கமாய்ப் போய்விட்ட காரணத்தால், சில தேசங்களில், அனுமதி பெருமல் உரிமையுரை யாரேனும் எழுதினுல், அது தண்டிக்கத்தக்க குற்றமென்று சட்டமும் ஏற்பட்டுவிட்டது. எழுத்துமூலமான அனுமதியை முன்னதாகவே பெற வேண்டுமென்ற ஒரு சட்டம் ஹாம்பர்க் நகரத்திலிருந்ததாம். சட்டத்தை மீறுபவர்களுக்குக் குறைவுண்டா என்ன? சங்கீத வித்துவானெருவர் ஓர் இசைப் பாடல் பாடினர். காலஞ்சென்ற ஓர் இசைவாணருடைய ஐந்தாவது சிராத்த தினத்தில், அவருடைய “ ஆன்மாவுக்கு உரிமை ” என்றெழுதி அப்பாடற் புத்தகத்தை வெளியிட்டார். இசைவாணருடைய குடும்பத்தாரிடமிருந்து இவ் வித்துவானுக்குச் சட்டப்படி நோட்டீஸ் வந்தது; அதில், ‘ இறந்து போனவருடைய ஆன்மாவினிடமிருந்து எழுத்துமூலமான அனுமதிபெற்றுக்கொண்டு வந்து காட்டவேண்டும்; இல்லாவிட்டால் உரிமையுரையை வாபஸ் பெறவேண்டும் ’ என்று கண்டிருந்தது !

வேறு சிலர் தங்கள் புத்தகத்தில் பல பேருக்கு உரிமையுரை எழுதிவைப்பார்களாம். இப்படி எழுதி வைப்பதில் கைதேர்ந்தவர் ஒருவர். இவர் இருபது முப்பது உரிமையுரையை வெவ்வேறு வள்ளல்கள் பெயரில் எழுதினர். அச்சாபீஸில் புத்தகம் கட்டுபவனிடம் (பைண்டு செய்பவன்) சொல்லி, வெவ்வேறு புத்தகங்களில் வெவ்வேறு உரிமையுரையை முதல் ஏடாக வைத்துக் கட்டடம் செய்

யச் சொல்லிவைத்தார். தமக்கு வேண்டிய வள்ளல்களைப் பார்த்து புத்தகத்தை அளித்தபோது, அவரவருக்கான உரிமையுரை முதலில் வைக்கப்பெற்ற புத்தகத்தை அவரவருக்குக் கொடுத்தார். பெற்றுக்கொண்ட வள்ளல்கள் ஒவ்வொருவருக்கும், தம்மையே இந்த ஆசிரியர் முதலில் பாராட்டி யிருக்கிறார் என்ற மகிழ்ச்சி !

இதற்கு மாறாக, எல்லாப் புத்தகங்களையும் ஒருவருக்கே உரிமையாக்கும் பழக்கமும் பார்க்கிறோம். நம்மிடையே அளவில்லாத நாடகங்களை எழுதிய ராவ்பகதூர் சம்பந்த முதலியார் அவர்கள், தம்முடைய நாடகங்கள் எல்லாவற்றையும்—இவை சுமார் ஐம்பது, அறுபது இருக்கும்—தம் தாய் தந்தையருக்கும் நண்பர் ரங்கவடிவேலுவுக்கும் உரிமையாக்கி யிருக்கிறார்.

சமீபகாலத்தில் மேலைநாடுகளில் வெளியான புத்தகங்களில் சராசரி நூற்றுக்கு ஐம்பது வீதம், எழுதியவருடைய மனைவிக்கே உரிமையாக்கப் பெற்றுள்ளன. ஒருவேளை, பெண்கள் விடுதலை வேண்டும், பெண்களுக்குச் சம உரிமை வேண்டும் என்பதைப் போன்ற இக்காலத்துக் கூக்குரல்களின் பலனாக இது இருக்கலாம். மனைவியிடம் கொண்ட—மரியாதையல்ல—அச்சத்தின் விளைவு இது என்று சுருக்கமாய்ச் சொல்லலாமல்லவா ?

ரால்ப்-ஸ்ரேஞ்ஜர் என்பவர் ரேடியோபற்றி அருமையான புத்தகமொன்றை யாருக்கும் புரியும்படி மிக எளிய முறையில் எழுதிப் பின் வருமாறு அதற்கு உரிமையுரையும் வரைந்தார் : "ரேடியோ கேட்கும் மூன்றரைக் கோடி பிரிட்டிஷ் மக்களுள் ஒருவரான உமக்கு இப்புத்தகத்தை உரிமையாக்குகிறேன் : உம்மையொத்த பலருடைய ஆதரவாலும் ஆர்வத்தாலும் தானே பிரிட்டிஷ் ரேடியோ ஏற்பட்டு ஒழுங்காக வேலை செய்ய முடிகிறது?" உண்மையான வார்த்தையல்லவா ?

தம்முடைய நண்பருக்கு ஒருவர் புத்தகத்தை உரிமையாக்கினர் : "என் நண்பர் இன்னர்—என்னேடு அடிக்கடி வாதம் செய்வார், அபூர்வமாய் ஒத்துப்போவார், எப்போதும் ஆதரவு காட்டுவார்—அவருக்கு இப்புத்தகம் உரிமை."

பி. ஜி. ஓட் ஹவுஸ் என்பவர் பிரபல பிரிட்டிஷ் ஹாஸ்ய எழுத்தாளர் ; இந்த யுத்தத்தில் பிரான்ஸில் இருந்து ஜெர்மானியரால் சிறைப்படுத்தப்பட்டு, அவர்களுடைய ரேடியோவில் அவர்களுக்காகப் பேசி, பிரிட்டிஷாரின் வசவை வாங்கிக்கொண்டவர். அவர் ஒருசமயம் எழுதிய உரிமையுரை மிகவும் கிண்டலானது: "என்னுடைய எந்த நண்பர் இப்புத்தகம் எழுதுவதற்கு வேண்டிய உதவியும் ஆலோசனையும் கொடுத்திராவிட்டால் இதை இப்போது ஆன காலத்தில் பாதி காலத்தில் எழுதி முடித்திருக்க முடியுமோ அந்த நண்பரான............இன்னருக்கு இப்புத்தகம் உரிமை !"

ஓர் உரிமையுரை காரணமாக ஒரு கெட்ட மனிதன் யோக்கியனுகி விடுகிறுனென்றுல், நம்பமுடியாது. ஆனல், இது உண்மையில் நடந்தது. 17ஆம் நூற்றுண்டின் கடைசியில் ஸர் சைமன் டெக் என்பவர் 'குருக்களுக்கு மந்திரி' என்றெரு புத்தகம் எழுதினர். அதை லிச்பீல்ட் என்ற ஊரின் குருக்களுக்கு அர்ப்பணம் செய்தார். அவ்வூர்க் கோயில் அப்போது இடிந்து குட்டிச்சுவராய்க் கிடந்தது. உரிமையுரையில், டெக் குருக்களை, "கோயில் திருப்பணி செய்ததற்காக" அளவு கடந்து புகழ்ந்திருந்தார். உண்மையில் அந்த குருக்கள் அப்படியொன்றும் செய்யவேயில்லை. ஆயினும் இவ்வுரிமையுரையைப் பார்த்த பிறகு அவருக்கு வெட்கமுண்டாகிவிட்டது. சீக்கிரத்திலேயே கோயிலைக் கட்டி முடித்தார்.

ஆனல், எல்லாவற்றிலும் சுவையுடைய உரிமையுரை, ஜார்ஜ் விதர் என்பவர் எழுதியதாகும். அவர் இங்கிலாந்தில் கிராம்வெல்லின் ராணுவத்தில் மேஜர் - ஜெனரல் பதவியில்

இருந்தார். அது புரட்சிக்காலம். புரட்சிச்சேனையில் பதவி வகித்த இவருக்கு அடிமைத்தனமான உரிமையுரைகளில் நம்பிக்கையில்லை. "பிழைகளின் கண்டனம் அல்லது கேலிப் பாடல்கள்" என்பது அவர் எழுதிய புத்தகம். "ஜார்ஜ் விதர் தமக்கு எல்லா நன்மையும் உண்டாவதாக என்று இப்புத்தகத்தை உரிமையாக்கிக்கொள்கிறார்" என்று அதை உரிமையாக்கினார்.

இந்த உரிமையுரை, நம்மிடையேயுள்ள ஆங்கிலப் பேராசிரியர் கே. சுவாமிநாதன் எழுதியதை எனக்கு நினைவூட்டுகிறது. "மீன் குஞ்சுக்கு நீச்சும், தமிழனுக்குத் தமிழும் சொல்லிக்கொடுக்கவேண்டுமா? சும்மா எழுதையா, எழுது என்று சொன்ன டி. கே. சி.க்கு அர்ப்பணம்" என்று அவர் தம்முடைய கட்டை வண்டி என்ற நாடகத்தை அர்ப்பணம் செய்தார். என்ன துணிச்சல்! 'சும்மா எழுதையா, எழுது' என்று சொன்ன டி. கே. சி.யின் துணிச்சலை நாம் பாராட்டுவதா? அல்லது அதை அப்படியே பாராட்டி அனுபவித்து எழுதியேவிட்ட சுவாமிநாதனுடைய துணிச்சலைப் பாராட்டுவதா?

# 5. புலமைப் பகட்டு

'வீரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும், விரல் நிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனில், பஞ்சேனும் பட்டேனும் வேண்டும், (இப்படி ஒருவருக்கு இருந்தால் தான்) அவர் கவிதை நஞ்சேனும் வேம்பேனும், நன்று' என்பதாக ஒரு கருத்து நம் நாட்டில் நெடுங்காலமாக உலவி வந்திருக்கிறது. படித்தவர்களையும் பெரியவர்களையும் அறிவாளிகளையும் உண்மையாகவே உலகம் மதிப்பது குறைவுதான். ஆடம்பரமும் வெளிவேஷமும் இருந்தால் தான் மதிப்பு. இந்த நிலையைச் சுட்டிக் காட்டவந்ததுதான் மேற்சொன்ன பாட்டு.

ஆடம்பரம் இருந்தால்தான் புலமைக்கு மதிப்பு என்ற இந்த நிலைமை காரணமாக, புலமை, பாண்டித்தியம் என்றால் புலமைபோய், ஆடம்பரம் மட்டும் மிஞ்சிற்று; கல்வியோ அதன் பயனாய் வந்த அறிவோ பிரதான மல்ல, வெறும் ஆடம்பரம் இருந்தால் போதும் என்ற நிலைமையும் தானே ஏற்பட்டுவிட்டது. புலவன் அல்லது பண்டிதன் என்று, வந்தாலே, மேற்சொன்னபடி யுள்ள பகட்டுப் பண்ணிக் கொள்ளத் தெரிந்தால் போதும், கல்வி வேண்டியது இல்லை என்று கருதுவதும் வழக்கமாகிவிட்டது. இந்த உண்மை பொதுவாய்ப் பண்டிதர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ அங்கெல்லாம் பொருந்தும்.

உண்மை என்றால் காலதேச வர்த்தமானங்களைக் கடந்த தல்லவா? அப்படியே இவ்வுண்மையும் தமிழ்நாடு மட்டு மல்லாமல், பிற நாடுகள் யாவற்றுக்குமே பொருந்துவது தான். தமிழ் நாட்டில் தான் இந்தப் புலமைப் பகட்டு அல்லது ஆடம்பரப் பாண்டித்தியம் ஓர் அரிய விளம்பர வித்தையாக வளர்ந்துவிட்டது என்பதில்லை. மற்ற நாடுகளி லும் இதே கதிதான் என்றறிவதில் ஓர் ஆறுதல் பிறக்கிறது.

மனிதர்கள் எல்லாருமே அறிவாளிகளாயிருந்து அறிவோடு நடந்துகொண்டால், அவர்களுடைய செயல்களை ஆராய்வதில் சுவை இராது. ‘எல்லாரும் எல்லாப்பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை’ என்றார் ஒரு புலவர். ‘வண்மையில்லை ஓர் வறுமையின்மையால்’ என்றார் கம்பர். செல்வர்களைக் குறித்து யாரும் பேசுவது வழக்கமில்லை. வறுமை மீதுதான் இலக்கியம் எழுகின்றது; எனவே வறுமையில்லாது போனால், பேச்சுக்கு இடம் ஏது? ‘ஒண்மையில்லை பல் கேள்வி ஓங்கலால்’ என்று கம்பரே சொன்னார். எல்லாரும் கேள்வி மிக்கவர்களாய், அறிஞர்களாகவே இருந்து விட்டால், அறிவில் வறுமை இராது; அப்போது எதைச் சொல்லிச் சிரிப்பது? நல்ல காலமாக உலகம் இப்படியாகி விடவில்லை. கல்வி கேள்விகளில் வல்ல பெரும் புலவர்கள் சிறந்த அறிஞர்களாயும் இருந்திருக்கிறார்கள். அவர்களுடைய அறிவை அனுபவிப்பது ஒருவிதம்; அவர்களுடைய ஆடம்பரம் விளைவிக்கிற நகைச்சுவையை அனுவிப்பது மற்றொரு விதம்.

திருக்குறள் எழுதினர் திருவள்ளுவர். அதில் முதல் அதிகாரம் ‘கடவுள் வாழ்த்து.’ (இதை அவர் எழுதினரா இல்லையா என்பது பற்றிப் பெரிய வாதம்.) இதிலுள்ள பத்துப் பாடல்களிலும் ஆசிரியர் தாம் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்பதைக் காட்டவில்லை. அருமையான கவிதைப் பண்பு பொருந்திய பாக்களால், அவர் வாழ்க்கையில் தாம் பெற்ற அனுபவத்தையெல்லாம் தொகுத்து, மக்களுக்கு எல்லா நாட்டிலும் எல்லாக் காலத்திலும் வழி காட்டக்கூடிய நூலாக அமைத்தார். அவர் கூறுகின்ற ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தால், அதுவே நல்வாழ்வு; சமய வாழ்க்கை என்று தனியாக வேறொன்றைச் சுட்டிச் சொல்ல வேண்டியதில்லை என்றே அவர் கருதியிருக்கலாம்.

ஆனல் பண்டிதர்கள் அவரை விட்டபாடில்லை. ஒரு சாரார் (சைவர்கள் கோபித்துக் கொள்ளமாட்டார் களென்று நம்புகிறேன்) அவருக்கு நெற்றியில் அழகாகத் திருநீற்றையிட்டு, கழுத்தில் உருத்திராக்கத்தைக் கட்டி, சைவராக்கிக் கோயிலில் பிரதிட்டை செய்துவிட்டார்கள். வைஷ்ணவர்கள் பொறுப்பார்களா? அவருடைய கடவுள் வாழ்த்து, திருமால் பரமானது என்று எத்தனையோ நூல் களும் கட்டுரைகளும் வெளியிட்டார்கள். சைனர்கள், திருவள்ளுவர் அருக பரமேட்டிகளுடைய அடித்தொண்டர் என்று ஸ்தாபிக்க முயன்றார்கள். கிறிஸ்துவர்களும் விட்ட பாடில்லை; கிறிஸ்து பெருமானுடைய மலைப்பிரசங்கத்தைக் கேட்டுத்தான் குறள் எழுதப்பெற்றது என்றார்கள். இப்படி யாக,சமயத்தைப் பற்றியே வாய்திறக்காத வள்ளுவருடைய சமயத்தைக் குறித்து எண்ணற்ற ஆராய்ச்சிகள், சண்டை கள்! முதற்குறள் ஒன்றைப்பற்றி மட்டும் எழுதப்பட்ட முதற்குறள் வாதப் புத்தகங்கள் அனந்தம்.

குறளாசிரியருடைய சமயம் ஒருபுறமிருக்க, சமயங் களுக்கெல்லாம் முதல்வரான கடவுள் எந்த பாஷையில் பேசினர் என்பது மற்றொரு முக்கியமான ஆராய்ச்சி. சமஸ்கிருதத்திலிருந்து தமிழ் பிறந்தது என்று சொல்லுகிற பண்டிதர்கள் அனேகமாக இப்போது இல்லையென்று நினைக்கிறேன். ஆனல், சுமார் இருபத்தைந்து ஆண்டு களுக்கு முன்னே, இவர்களுடைய ஆதிக்கம் உச்சநிலையி லிருந்தது. இவர்களுடைய முடிந்த முடிபு, தேவபாஷை சம்ஸ்கிருதந்தான் என்பது. எப்படி?

உலகத்தில் புதிதாகத் தாயின் கருப்பத்திலிருந்து பிறக்கிற குழந்தை 'க்வா, க்வா' என்று பிறந்தவுடனே கத்துகிற தென்று நாம் சொல்லுகிறோம். சம்ஸ்கிருதத்தில் க்வா என்றால் எங்கே என்று பொருள். தாயின் வயிற்றில் குழந்தையைக் காத்தவர் கடவுள். அக்கடவுளோடு பேசிப் பழகிய நினைவுகொண்ட குழந்தை, கடவுளைப் பிரிந்து உலகில்

பிறந்தவுடன் 'நீ எங்கே போய்விட்டாய் ?' என்று அவரைக் கேட்பதற்காக, 'க்வா' என்று சமஸ்கிருதத்தில் கேட்கிறதாம் ! எனவே, கடவுளுடைய பாஷை, அதாவது தேவ பாஷை, சமஸ்கிருதம்தான் என்பதில் தடையேது ?

இப்படித் தேவபாஷையை ஆராய்ந்த பெருமை நமக்கு மட்டும் உரியதல்ல. மேலைநாட்டிலும் இந்த ஆராய்ச்சி நடைபெற்றிருக்கிறது. கிறிஸ்துவ வேதத்தின்படி, கடவுள் முதன்முதல் ஆதாம் என்ற ஆடவனையும், ஈவாள் என்ற பெண்ணையும் உண்டாக்கி இவர்களை ஈடன் என்ற தோட்டத்தில் வாழச்செய்தாராம். இந்த ஈவாள் பேசிய பாஷை என்ன என்பதைக் குறித்து, புரோடன் என்ற புலவர் 1590 இல் விரிவானதோர் ஆராய்ச்சி நூல் வெளியிட்டார். இதுமட்டுமல்ல. மற்றொருவர் சொன்னார். "ஆண்குழந்தைகள் கத்தும்போது ஆ என்று கத்துகின்றன. பெண் குழந்தைகள் கத்தும்போது ஈ என்று கத்துகின்றன. இதற்கென்ன காரணம், கவனித்தீர்களா ? ஆண்குழந்தை, முதல் ஆடவனாகிய ஆதாம் பெயரின் முதலெழுத்தான ஆவைச் சொல்லியும், பெண்குழந்தை முதல் பெண்ணான ஈவாள் பெயரின் முதலெழுத்தான ஈயைச் சொல்லியும் முறையே கத்துகின்றன" என்றார். எவ்வளவு அருமையான ஆராய்ச்சி ! ஆராய்ச்சியில் இவர் நம்மவருக்குத் தோற்கவில்லை.

மேலைநாட்டு ஆராய்ச்சியாளர் பலர், உலகத்தைக் கடவுள் எப்போது படைத்தார் என்ற ஆராய்ச்சியைத் தொடங்கினார்கள். கோடைக் காலத்திலா, மாரியிலா, பனிக் காலத்திலா உலகம் படைக்கப்பெற்றது என்பது அவசியம் முடிவுசெய்ய வேண்டுமென்று ஒருவருக்குத் தோன்றியது. பலபேர் பலவிதமாய்ச் சொன்னார்கள். ஒரு பருவகாலத்தில் பிரபஞ்சம் படைக்கப் பெற்றது என்றால் பருவகாலம் உண்டாவதற்குக் காரணமான சூரியன், சந்திரன், காற்று முதலியன எப்போது உண்டாயின என்ற கேள்வி

வருகிறது. இதையெல்லாம் அவர் பொருட்படுத்தவில்லை. செப்டம்பர் மாதம் ஆறுந்தேதி வெள்ளிக்கிழமை, மாலை நாலு மணிக்கு மேல் உலகத்தைக் கடவுள் சிருஷ்டித்தார் என்று அவர் முடிவு கட்டினர்!

தமிழ் நாட்டில் பலத்த விவாதத்துக்கு இடமான ஒரு முக்கிய விஷயம் சேரமன்னர் தலைநகரம் எது என்பது. இதுபற்றி எவ்வளவோ விவாதம், சண்டை. சேரர் தலைநகர் வஞ்சி என்று தமிழ் நூல்கள் கூறுகின்றன. இந்த வஞ்சி எங்கே இருக்கிறது என்பதில்தான் சண்டை. திரிசிராப்பள்ளிக்கடுத்த கருவூர் என்ற ஊரில் வாழ்ந்த பெருஞ் செல்வரால் ஆதரிக்கப்பெற்ற தமிழ்ப் பண்டிதப் பெருந்தகையாரான மகாவித்துவானொருவர், தம் வள்ளலைப் பாராட்ட எண்ணி, இக் கருவூர்தான் வஞ்சிநகரம் என்று முடிவுகட்டி, ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டார். (இப் புத்தகமானது, வழக்கம்போல் சென்னைப் பல்கலைக் கழகப் பரீட்சைகளுக்குப் பலவருஷம் பாடமாக இருந்தது என்பது சொல்லத் தேவையில்லை.) கொச்சி அரசாங்கத்தாருடைய ஆதரவுபெற்ற மற்றொரு பெரும் பண்டிதர், கொச்சி சமஸ்தானத்திலுள்ள திருவஞ்சைக்களம்தான் வஞ்சிநகரம் என்று முடிவுசெய்து மற்றொரு புத்தகம் எழுதினர். (இது பாடமா என்ன என்பது எனக்குத் தெரியாது.) வேறு எந்த வள்ளலும் முன்வந்து, கீழ்க் கடற்கரையிலுள்ள நாகைப்பட்டினந்தான் வஞ்சி என்று முடிவு செய்தெழுதுவதற்குப் பணங்கொடுக்கவில்லை போலும்!

இந்தப் பண்டிதர்களுக்கு உடன்பிறந்தவர்கள் இங்கிலாந்திலும் இருந்திருக்கிறார்கள். இந்நாட்டில் பழமையான இரண்டு சர்வகலாசாலைகள், ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலையும், கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையும். சர்வகலாசாலைகளுக்குள் போட்டியில்லாவிட்டாலும், இவற்றின் அடியார்களுக்குள் போட்டியும் சண்டையும் தொடங்கிவிட்டது. ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை ஒன்பதாம் நூற்றாண்டில்

தோன்றியது என்று சொல்வார்கள். கேம்பிரிட்ஜ் அடியாரொருவர் பார்த்தார். தம் கலாசாலை இதற்கு முன்னமே தோன்றிவிட்டது என்று நிரூபித்து ஒரு புத்தகம் வெளியிட்டார். இன்னும் தீவிரமான பக்தரொருவருக்கு இது திருப்திதரவில்லை. இதைக் கண்டித்து ஒரு புத்தகம் வெளியிட்டார். அதில், கிறிஸ்து பிறப்பதற்கு 400 ஆண்டுகளுக்கு முன்னமே கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை நிறுவப்பெற்றது என்று முடிவு கட்டினர். ஆனல், பாவம், அந்தக் காலத்தில் இங்கிலாந்தில் நாகரிக மனிதர் வாழ்ந்ததேயில்லை என்பது சரித்திர ஆசிரியர்கள் சாதாரணமாய்ச் சொல்லுகிற உண்மை.

பெரும் பண்டிதர்களுடைய மூளையே தனிதான்; அதன் வேலையின் அருமைப்பாடும், தனியானதுதான். ஆனல், இந்த வேலையையெல்லாம் ஏதாவதொரு பொருட்காட்சிச்சாலையில் வைத்துப் பார்க்கலாமேயன்றி, நம்முடைய தினசரி வாழ்க்கையில் தொடர்புபடுத்திக் கொள்ளக்கூடாது.

கிறிஸ்தவ வேதமாகிய பைபிள் சம்பந்தமாக, இப்படிப்பட்ட பண்டிதர்கள் செய்த வேலை அபாரமானது. ஆர்தர் ஹில்டெஷாம் என்ற ஒருவர் 19 பாடலடங்கிய ஒரு பதிகத்துக்கு வியாக்கியானமாக 152 பிரசங்கம் செய்தார்; அவரே மற்ருெரு பதிகத்துக்கு வியாக்கியானமாக 657 பெரிய அளவு பக்கம்கொண்ட புத்தகமொன்று வெளியிட்டார். வில்லியம் பிரின் என்பவர் 1,100 பக்கமுள்ள பெரும் புத்தகமொன்றெழுதி நாடகத்தை அரங்கில் நடிப்பதால் உலகத்துக்கும் சமயத்துக்கும் அரசாட்சிக்கும் தனி மனிதனுக்கும் என்னென்ன கெடுதல் விளைகிறதென்பதை விரிவாக எடுத்துக்காட்டினர்; இது 1632 இல். அவர் எழுதிய புத்தகங்களின் தொகை 200க்கு அதிகமாம். சாப்பிடுவதற்காக அவர் பேனவை நிறுத்துவது கூட அபூர்வமாம். நாலுமணிக்கொரு தடவை ஒரு ரொட்டித்

துண்டை வாயில் போட்டுக்கொண்டு, கொஞ்சம் சாராய மும் குடித்துவிட்டு, மறுபடியும் எழுதத் தொடங்கி விடுவாராம். அக்காலத்து பிரிட்டிஷ் அரசியின் ஆதரவு பெற்று நடந்த ஒரு நாடகத்தை இவர் குறை கூறியதற்காக இவரைக் கைது செய்து, பெரிய அரசியற் சிறையாகிய டவர் என்ற சிறையில் இவரைப் போட்டார்கள். இவருடைய புத்தகங்களையும் கையெட்டுப் பிரதிகளையும் ஒன்று சேர்த்து வைத்துக் கொளுத்தினார்களாம். அதிலிருந்து வந்த புகையே அவர் உயிரை வாங்கிவிடப்போதுமானதாம்! சிறையில் அவரைப் போட்டபோது, அவரிடமிருந்த பேனா, காகிதம், புத்தகம் முதலியவற்றைப் பிடுங்கிவிட்டார்கள். ஆனால் அவரோ, ஒரு கரியால் சுவரெல்லாம் பாட்டும் கட்டுரையு மாக எழுதி வைத்து, தம்மை விடுதலை செய்தவுடன் அவ்வள வையும் புத்தகமாக வெளியிட்டாராம். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமல்லவா? என்ன இருந்தாலும் புலவர் புலவரே.

சிவஞான சுவாமிகள் என்பவர் 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். சைவசித்தாந்தத்துக்குரிய அசைக்கமுடியாத தூண்களில் தனிப்பெருந் தூணுயுள்ளவர். கண்டனம் எழுதுவதில் இவருக்கு ஈடு இவரேதான் என்று சொல்வார் கள். இருப்புக் கடலை என்று சொல்லுகின்ற காஞ்சிப் புராணம் பாடி அதை இவர் காஞ்சியில் அரங்கேற்ற ஆரம் பித்தபோது, பொறாமைபிடித்த சில வைணவர்கள் பலவித ஆட்சேபனை செய்தார்களாம். இவற்றுக்கெல்லாம் சமா தானம் சொல்லியும், சுவாமிகள் கோபம் தணியப் பெறாத வராய், வைணவர்கள் போற்றிவந்த கம்பராமாயணத் துக்கே கண்டனம் எழுதத்தொடங்கினர். இராமாயணத்தில் நூற்பயன் சொல்லுகின்ற பல செய்யுட்களில், 'நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழும் உண்டாம்' என்பது ஒருபாட்டு. இந்தப் பாட்டில் சுவாமிகள் நூறுகுற்றம் காட்டி, அந்த வைணவர்களைச் சமாதானம் கேட்டாராம்.

பாவம், அவர்கள் என்னத்தைக் கண்டார்கள்? விழித்தார்கள். பிறகு சுவாமிகளே அந்த நூறு குற்றங்களுக்கும் சமாதானம் கூறினாராம். இந்த ஆட்சேப சமாதானங்கள் இன்று 'கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி' என்று அச்சிட்டு வழங்குகின்றன.

இதில் வேடிக்கை என்னவென்றால், இந்தப் பாட்டு இராமாயணத்துக்கு உரியதல்ல; முதற் செய்யுளுமல்ல. யாரோ அபியுக்தரொருவர் இராமாயணத்தைப் புகழ்ந்து பாடியது. இதன் ஆட்சேப சமாதானத்தால் இராமாயணத்துக்கு எந்தப் பயனுமில்லை.

கம்பராமாயணம் என்ற பெயரைக் கண்ட மாத்திரத்தில், கம்பர் கால ஆராய்ச்சியைப்பற்றிக் கொஞ்சம் எழுதும்படி என் பேனா சொல்கிறது. கம்பர் காலத்தைப்பற்றி எவ்வளவோ ரசமான வேடிக்கையான வாதங்கள். இவற்றைச் சொல்லி வேடிக்கை பண்ண ஆரம்பித்தால், என்னுடைய நண்பர்களை எனக்கு வேண்டாதவர்களாய் ஆக்கிக் கொள்வதாக முடியும். நண்பர்களை இழக்க நான் விரும்பவில்லை. எனவே இந்த ஆராய்ச்சியில் இறங்கவில்லை.

பொதுவாக இப்படிப்பட்ட ஆடம்பரப் பண்டிதர்களுடைய வாதமும் ஆராய்ச்சியும் எங்கே கொண்டுபோய் விடும் என்பதைச் சொல்ல முடியாது. புகையிலை ஆராய்ச்சியை ஓர் உதாரணமாய்ச் சொல்லலாம். ராலே என்பவன் புகையிலையை அமெரிக்காவிலிருந்து முதல்முதலாக இங்கிலாந்துக்குக் கொண்டுவந்தான். கொஞ்ச நாளைக்கொல்லாம் புகையிலைப் பழக்கம் நாடெங்கும் பரவ ஆரம்பித்தது. மக்கள் தங்கள் பொழுதையும் உடலையும் இதனால் வீணாக்குவதைக் கண்ட ஒரு புலவன் புகையிலை சம்பந்தமாக விரிவான ஆராய்ச்சி யொன்று செய்தான். பாதாள உலகத்துக்கு அரசனான புளூடோ என்பவன் கால்வழியில் வந்தது புகையிலை: ஆகவே இது சர்வநாசத்துக்கு வழிகோலும் என்பது அவன் கண்ட முடிவு.

அவனுடைய ஆராய்ச்சி வேடிக்கையாயிருந்த போதி லுங்கூட, புகையிலை கெடுதலானது என்ற அபிப்பிராயத்தை நாமும் ஒப்புக்கொள்கிறபடியால், அந்த ஆராய்ச்சியை அனுபவிக்கவும் முடியும். நம் நாட்டிலும் அந்த ஆராய்ச்சியை விட்டபாடில்லை. பிரமாவுக்குப் பிரியமான பிரம்ம பத்திரமென்று அதற்குப் பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஒரு புலவர் தம் வள்ளலிடம் இந்தப் புகையிலையையே தூதாகவும் அனுப்பினர்; செய்யுளில்தான்.

புகையிலையின் பிறப்பாராய்ச்சிபோலவே, தமிழில் வழங்குகின்ற பலவகை மொழியாராய்ச்சியும் மிக்க விநோதமானது. சூரியன்தான் உலகனைத்துக்கும் உயிரூட்டுகிறன். அவன் தருகின்ற வெப்பம் இல்லாவிட்டால் உயிர்கள் வாழ முடியாதல்லவா? சரி, புல்பூண்டு, பிராணிவர்க்கம், மனிதன் ஆகிய உயிர்வர்க்கத்தோடு நிறுத்துவானேன், மொழிக்குமே அவன் உயிர் தருகிறன் என்று சொன்னலென்ன என்ற நோக்கத்தோடு ஆரம்பித்தார் ஒரு தமிழ்ப்புலவர். சுல் என்ற ஒலிதான் உலகத்தில் அனதியாக உள்ளது என்று முடிவு செய்தார். சுல் என்றல் சூரியன். தமிழில் வழங்குகிற எல்லா எழுத்துக்களும் சொற்களும் மொழிகளும் யாவும் சுல்லிலிருந்து வந்தன என்று முடிவுகட்டி, பெரிய மொழி நூல் ஒன்று எழுதி வெளியிட்டார். அவர் செய்த அரும் பணியைத் தமிழுலகம் மறக்குமா? சுல் - தான் புலவர் என்ற அழகிய பட்டத்தை அவருக்குச் சூட்டி, அவரை உச்சிமேற்கொண்டு மெச்சாநிற்கிறது.

மொழிப்பற்றுதலைவிட எழுத்துப்பற்றுதல் இன்னும் நுட்பமானது, சூக்ஷ்மமானது. தமிழ் எழுத்துக்களின் வடிவச் சிறப்பை ஆராய்ந்தார் ஒரு பெரும்புலவர். அதிலிருந்து அவருள்ளத்தில் ஓர் அரிய உண்மையொளி உண்டாயிற்று; உடனே அது வாக்கினிலே வெளிப்பட வேண்டியதுதானே? கட்டுரையாகவும் புத்தகமாகவும் வெளிப்பட்டது. எப்படி?

பஞ்சாட்சர மந்திரம் இருக்கிறதல்லவா ?-சிவபெருமானுக்குரிய திருவைந்தெழுத்தாகிய நமசிவாய என்பது - இதிலுள்ள எழுத்துக்களை எடுக்கவேண்டியது; ஒவ்வொன்றையும் கத்தரிக்கோலால் துண்டு துண்டாக நறுக்கவேண்டியது. இந்தத் துண்டுகளை வைத்தே உலகிலுள்ள எந்தப் பாஷையின் எழுத்துக்களையும் அமைக்கலாம். ஆகவே, உலகத்து மொழிகள் யாவுக்கும், மக்கள் பேசும் பேச்சு அனைத்துக்கும், மூலகாரணமாயுள்ளன இத்தமிழ் எழுத்துக்கள் - இப்பஞ்சாட்சர மந்திரம். எனவே, 'கடல் வரைப்பில் இதன் பெருமை யாவரே கணித்தறிவார் ?'

ஆங்கிலத்தில் வைத்தியர்களைப் பற்றி ஒரு வேடிக்கைத் துணுக்கு வழங்குவதுண்டு. அதாவது, ஒரு சத்திர சிகிச்சையைச் செய்து முடித்த டாக்டர் வெளியே வந்து சொன்னாராம் : " ஆப்பரேஷன் மிக்க வெற்றிகரமாய் நிறைவேறிவிட்டது. நோயாளிதான் இறந்துபோய்விட்டான்." இதை நாம் எப்படி அனுபவிக்கிறோமோ அதேபோல, ஆடம்பரப் பண்டிதர்களின் செயல்களையும் அனுபவித்தோமானால் அளவில்லாத நகைச்சுவை கிடைக்குமென்பது நிச்சயம். இவர்களுடைய அபிப்பிராயத்தை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், இவர்கள் செய்கையைப் பார்த்துச் சிரிக்கலாமல்லவா ?

# 6. புலமையும் தண்டனையும்

இந்தக் காலத்திலெல்லாம் புத்தகம் எழுதுவதோ வெளியிடுவதோ என்ருல், கொஞ்சமும் உப்புச்சப்பில்லாத காரியமாகப் போய்விட்டது. யார் வேண்டுமானுலும் எழுதலாம், எதைப்பற்றி வேண்டுமானுலும் எழுதலாம். வெளியீட்டாளர் வெளியிடத் தயாராயிருக்கிருர்கள். பணவீக்கமுள்ளோர் பணங்கொடுத்து வாங்கவும் தயாராயிருக்கிருர்கள். ஏன் இப்படி எழுதினுய், அல்லது ஏன் அப்படி எழுதவில்லை என்ற கேள்விக்கு இடமேயில்லை. எழுத்துக்கு எவ்விதமான தடையோ நிர்ப்பந்தமோ இல்லாத இன்றைய நிலையில், எழுதுவோருக்கு எழுதுவதில் என்ன உற்சாகந்தான் இருக்கமுடியும்?

ஏதோ இந்த யுத்தத்தின் புண்ணியத்தால், காகிதச் சிக்கனம், காகிதக் கண்ட்ரோல் என்ற உத்தரவுகள் வெளியிடுவோரைக் கொஞ்சம் பாதிக்கின்றன. பேபர் ஆபீஸருக்குப் பயந்து, அனுமதி பெற்றுத்தான் வெளியிடவேண்டும், அல்லது இன்ன மாதிரித்தான், அல்லது இன்ன நிபந்தனைகளை ஒட்டித்தான், வெளியிடவேண்டும் என்றெல்லாம் கவனித்துச் செய்யவேண்டி யிருக்கிறது.

ஏதோ சில சமயம், சர்க்கார் அபூர்வமாகத் தலையிட்டு புத்தகத்தைத் தடை செய்யலாம், பறிமுதல் செய்யலாம், எழுதியவரைச் சிறையிலடைக்கலாம், வெளியிட்டவருக்கு அபராதம் விதிக்கலாம்; எல்லாம் புத்தகம் வெளியாகி நெடுங்காலத்துக்குப் பிறகுதான். ஏ. கே. செட்டியாருடைய ஜப்பான் என்ற புத்தகம் இரண்டு பதிப்புக்கள் வெளியான பிறகு, பல வருஷங்களுக்கப்பால், சர்க்காருக்கு ஒருநாள் திடீரென்று பயம் வந்தது. புத்தகத்தைத் தடை செய்துவிட்டார்கள். அவ்வளவுதான். இரண்டு பதிப்புக்களான பிறகு, ஆசிரியருக்குத்தான் என்ன கவலை அல்லது வெளியிட்டோருக்குத்தான் என்ன கவலை? தவிர, தடை

செய்யப்பெற்ற புத்தகத்துக்கு மதிப்பும் அதிகமாகிற தல்லவா ?

ஹிங்கோரானி என்பவரொருவர் காந்தியடிகள் எழுதியவற்றுள் சிலவற்றைத் திரட்டி ஆங்கிலத்தில் ஒரு புத்தகமாக வெளியிட்டார். இது பல பதிப்புகள் செலவழிந்த பிறகு, புதுமைப் பதிப்பகத்தார் இதையே தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டார்கள். சென்னை அரசாங்கம் உடனே தமிழ்ப் பதிப்பைத் தடை செய்தது. சம்பந்தப் பட்டவர்கள் எல்லோருக்கும் உடனே இதில் உற்சாகம். ஆனால் இந்த உற்சாகம் எத்தனை நாளைக்கு ? தடை உடனே எடுபட்டுப் போயிற்று.

இப்படியாக உற்சாகமோ பயமோ ஏற்படுவதற்குள்ள சந்தர்ப்பங்கள் மிகவும் குறைவு என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பழங்காலத்து நிலைமை வேறு. அரசியல் நிலைமைகள், சமயப் பூசல்கள் முதலிய பல காரணங்களால், அக்காலத்தில் புத்தகம் எழுதுவதும், எழுதியதை அங்கீகரிக்கப் பெறுவதும் அவ்வளவு எளிதான காரியமல்ல.

திருவள்ளுவர் சரித்திரம் நாம் அறிவோம். தம்முடைய வாழ்க்கை யனுபவத்தையும் அளவற்ற ஞானத்தையும் திரட்டி அருமையாகத் திருக்குறள் என்ற நூலாகச்செய்தார். ஆனால், புலவர்கள் அதை எளிதில் ஒப்புக்கொண்டார்களா ? இல்லை. மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான்கள் கூட்டத்தில் அவர் தம் நூலைக் காட்டியபோது எல்லோரும், "எங்கள் சங்கத்தில் சங்கப்பலகை என்ற ஒரு தெய்விகப் பலகை இருக்கிறது. அது பொற்றாமரை வாவியில் மிதக்கிறது. புதிதாய் எழுதப்பெற்ற நூல்களை அதன்மேல் வைத்தால், நல்ல நூலாய் இருந்தால் அப்படியே வைத்திருக்கும் ; நல்லதாயிராவிட்டால் கீழே வாவியில் தள்ளிவிடும். உம்முடைய நூலையும் அதன்மேல் வையும். கீழே தள்ளாமலிருந்தால் நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம்" என்றார்களாம். என்ன செய்வார் திருவள்ளுவர், பாவம் ! நாலாவது பாரம்

முதல் எம். ஏ. வகுப்பு வரையில் எல்லாப் பரீட்சைக்கும் அவருடைய நூலே இன்று பாடமாயிருக்கலாம்; உலகத்தி லுள்ள எல்லா பாஷைகளிலும் அது இன்று மொழிபெயர்க் கவும் பெற்றிருக்கலாம். ஆனல், அன்று அவர் தமிழ்ச் சங் கத்தாரின் பரீட்சைக்கு உட்படவேண்டியதாயிற்று. அவர் கள் சொன்னபடியே தம் புத்தகத்தைச் சங்கப் பலகையின் மீது வைத்தார். என்ன ஆச்சரியம்! பலகையானது சுருங்கி, திருக்குறள் ஒன்றைமட்டும் தன்மீது ஏந்திக் கொண்டு, மற்றெல்லா நூல்களையும் தண்ணீரில் தள்ளி விட்டதாம்! பிறகுதான் திருக்குறளுக்கு ஒப்பற்ற மதிப்பு ஏற்பட்டதென்பது கதை.

இந்த இருபதாம் நூற்றுண்டில் தமிழுக்கு அப்படிப் பட்ட பலகையொன்று இருந்தால் எவ்வளவு நன்றுயிருக் கும் என்று நான் பலமுறை எண்ணியதுண்டு. பலகை யானது இன்று வெளிவருகிற எல்லாப் புத்தகங்களையும் மூழ்கடித்துவிட்டு, அனேகமாக காலியாகவே மிதந்து கொண்டிருக்கும் அல்லவா?

திருவள்ளுவரைப் புலவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை என்று வேண்டுமானல் நாம் சொல்லலாம். ஆனல், உலகமே புகழும் கிரேக்க தத்துவ ஞானிகளான ஸாக்ரடீஸுக்கும் அரிஸ்டாடிலுக்கும் என்ன நேர்ந்தது? மரண தண்டனை யல்லவா கிடைத்தது?

புத்தகம் எழுதியவர்களும், வெளியிட்டவர்களும் பட்ட துன்பத்தை எண்ணினல் சில விநோதமாயும் சில பயங்கர மாயும் உள்ளன. முதன் முதலாக அச்சடிக்கும் வித்தை உபயோகத்துக்கு வந்தபோது, பஸ்ட் என்பவரொருவர் பாரிஸ் நகரத்தில் பைபிள் புத்தகத்தை இரகசியமாக அச் சிட்டு விற்பனை செய்தார். அதற்கு முன்னெல்லாம் ஒரு பைபிள் எழுதிக் கொடுப்பதற்குக் கூலி ஐந்நூறு கிரவுன்; ஏனென்றல் புத்தகம் முழுவதையும் பலநாள் முயன்று கையாலேயே எழுதவேண்டியிருந்தது. இவரோ தாம் அச்

சிட்ட புத்தகத்தை அறுபது கிரவுனுக்கு விற்று வந்தார். புத்தகத்தை வாங்கியவர்களெல்லாம், ஒன்றைப்போலவே மற்றொன்று இருப்பதையும், மிக விரைவில் அவர் புத்தகம் 'எழுதி' முடித்ததையும் கண்டு ஆச்சரியப்பட்டு, சந்தேகிக்கலானார்கள். குட்டிச்சாத்தானை ஏவல் கொண்டுதான் பஸ்ட் இப்படிப் புத்தகம் தயாரிக்க முடிந்ததென்று கருதினார்கள். ஏனெனில் அப்போது அச்சு வித்தையைப்பற்றி யாருக்கும் தெரியாது. தவிர, சிவப்பு மையால் புத்தகம் அச்சிடப்பட்டிருந்தபடியால், அவர் தம் இரத்தத்தாலேயே புத்தகத்தை எழுதிவிட்டார் என்று சொல்லிப் பலரும் தூற்றலாயினர். தம்முடைய அச்சு வித்தையின் இரகசியத்தை வெளியிட்டுத்தான் அவர் இந்த ஆபத்திலிருந்து தப்ப முடிந்தது.

ஆசிரியர்களுக்குக் கிடைத்த தண்டனைகள் பயங்கரமானவை.

**குட்டுதற்கோ பிள்ளைப் பாண்**
**டியன் இங் கில்லை ;**
**குடும்பியள வாய்க்காதைக்**
**குடைந்து தோண்டி**
**எட்டினமட் டறுப்பதற்கோ**
**வில்லி இல்லை**
**இரண்டுதலை முடிந்தொன்றாய்**
**இறங்கப் போட்டு**
**வெட்டுதற்கோ கவிஒட்டக்**
**கூத்தன் இல்லை**

என்று பிற்காலத்திலே ஒரு புலவர், தம் காலத்தில் போலிப் புலவர்கள் அதிகமாய்ப் பெருகிவிட்டதைக் கண்டு, 'இவர்களைத் தண்டிப்பார் முன்போல யாருமில்லையே!' என்று வருந்திப் பாடுகிறார்.

போலிப் புலவர்களைக் கண்டால் பிள்ளைப் பாண்டியன் தலையில் குட்டுவானாம். வில்லிபுத்தூரார் எட்டின மட்டும்

காதைக் குடைந்து தோண்டி அறுத்துவிடுவாராம். பாவம், இந்தக் கொடுமையினுல்தானே என்னமோ, இவரே ஒரு சமயம் கந்தரந்தாதியில் ஒரு பாட்டுக்குப் பொருள் சொல்லத் தெரியாமல் அருணகிரிநாதரிடம் அகப்பட்டுக்கொண்டு தம் காதைப் பறிகொடுக்க வேண்டிய நிலைக்கு வந்துவிட்டார். இவர் போக, ஒட்டக்கூத்தரோ, புலவர்கள் தலைகளை இரண்டிரண்டாய்ச் சேர்த்து முடிந்து வெட்டியே விடுவாராம்!

இதெல்லாம் என்ன காட்டுமிராண்டித்தனம் என்று நமக்கு எண்ணத் தோன்றுகிறது. இந்தப் பழக்கங்கள் நம்மிடையே மட்டுமல்ல, வேறு நாடுகளிலும் சட்ட ரீதியாகவே இருந்து வந்தன. லேட்டன் என்பவர் 1628இல் இங்கிலாந்தில் கோயிலையும், பாதிரிமாரையும் தாக்கி ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டார். அரசாங்கம் புத்தகத்தைப் பறிமுதல் செய்து அவருக்குப் பத்தாயிரம் பவுன் அபராதம் விதித்தது. அது மட்டுமல்ல; "சட்டையைக் கழற்றிவிட வேண்டும்; காதை அறுத்துவிடவேண்டும்; மூக்கைக் கிழித்துவிட வேண்டும்; சவுக்கடி தரவேண்டும்; வெஸ்ட்மின்ஸ்டர் கழுவில் ஏற்றவேண்டும்; ராஜத்துவேஷத்தை விதைத்தவன் என்று பொருள்படும்படி 'ரா. வி.' என்ற எழுத்துக்களை அவன் முகத்தில் சூட்டுக்கோலால் எழுதவேண்டும்" என்பது அவருக்கு விதித்த முழுத் தண்டனையின் வாசகம்!

சமீப காலத்தில் தமிழ் வீரர்கள் சிலருக்கு அறிவு கொழுந்துவிட்டுச் சுடர்விட்டு எரியலாயிற்று. அதன் பயனுய்ப் புதிய ஞானேதயம் ஏற்பட்டு, தமிழ்ப் பெருநூல்களாகிய கம்ப ராமாயணத்தையும், பெரிய புராணத்தையும் தீயிட்டுக் கொளுத்திவிடவேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

இந்த வீரர்களுக்குச் சளைத்ததல்ல பிரிட்டிஷ் நியாய சபையும். 17ஆம் நூற்ருண்டில் அங்கிருந்த வில்லியம் பிரின் என்பவர் தம் காலத்து நாடகங்களைக் கண்டித்து ஒரு

பெரிய புத்தகம் எழுதினர். அது எவ்வளவோ பெரிய அபத்தக் களஞ்சியம். 'பைபிள் அச்சிட்டுள்ள காகிதத்தைவிட உயர்ந்த காகிதத்தில் ஷேக்ஸ்பியர், நாடகங்கள் அச்சிட்டிருக்கின்றனவே!' என்ற அழுகையும் அப் புத்தகத்தில் ஒரு பக்கம் இருந்ததாம். சிறைகளில் கொலைத் தண்டனைபெற்ற கைதிகளைத் தூக்குப் போடுகிற அரசாங்கக் கொலையாளி இப்புத்தகத்தைப் பகிரங்கமாக எரித்துவிடவேண்டும் என்று இப்புத்தகத்துக்குத் தண்டனை விதிக்கப்பெற்றதாம்! அந்நாட்டில் இத்தகைய மரியாதைபெற்ற முதல் புத்தகம் இதுவாம்.

புகழேந்திப் புலவர் நளவெண்பா அரங்கேற்றியபோது சபையில் ஒட்டக்கூத்தர் இருந்து அடிக்கடிக் குற்றம் சொல்லிக் கொண்டிருந்தாராம். இதைப்பொருத புகழேந்தி, இரவில் ஓர் அரிவாளை எடுத்துக்கொண்டு, ஒட்டக்கூத்தரைக் கொல்ல எண்ணி அவர் வீட்டுக்குச் சென்ருராம். புலமையில் ஏற்பட்ட பகையைத் தீர்த்துக்கொள்ள இது குறுக்கு வழியல்லவா? நல்ல வேளையாக இது வெறுங்கதைதான்.

புகழேந்தி யொத்தவரொருவர் வால்டேர் என்ற பிரசித்திபெற்ற பிரெஞ்சு ஆசிரியர் காலத்தில் வாழ்ந்தார். ரோஹன் சாபட் என்ற வீரர் இவர். வால்டேரின் கோபத்துக்கு இவர் ஒரு சமயம் ஆளாக நேர்ந்தது. வால்டேர் நயமாக இவரைப் பழித்து எழுதிவிட்டார். கோபங் கொண்ட ரோஹன், தம் ஆட்களைவிட்டு வால்டேரைச் செம்மையாக அடித்துவிடச் செய்தார். அடிபட்ட வால்டேர், அக்கால முறைப்படி, பழிவாங்க எண்ணி, ரோஹனைத் துவந்த யுத்தத்துக்கு அழைத்தார். செல்வாக்கு அதிகம் பெற்றிருந்த ரோஹன், அதிகாரிகளிடம் சொல்லி, வால்டேரைச் சிறையிலடைத்துவிட்டார்.

புறநானூற்றில் இப்படி ஒரு புலவரை அரசன் அடித்த சம்பவம் ஒன்றைக் காண்கிருேம். ஆனல் அங்கே நிலைமை இதற்கு நேர்மாருனது. தாமப் பல்கண்ணனர் என்ற

பார்ப்பனப் புலவரும் சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும் வட்டு ஆடுகிறார்கள். அப்போது புலவர் ஒரு காயை ஒளித்துவிட்டார். பார்த்த மாவளத்தான் கோபித்து வட்டினால் அவரை அடித்துவிட்டான். அடிக்கவே, புலவர், "சோழர் யாரும் பார்ப்பார் நோவன செய்யமாட்டார்கள். நீ இப்படிச் செய்துவிட்டாயே! நீ ஒரு சோழனா?" என்று தகாத வார்த்தை சொல்லிவிட்டார். இருந்தும் மாவளத்தான், தான் அவரை அடித்தமைக்கு வருந்தி அவரிடம் மன்னிப்புக் கேட்டானாம். குற்றம் கண்டவிடத்து இந்த மாதிரிப் பொறுத்தல் மிகவும் அருமை.

திருமாலையே பாடிவந்தவர் திருமழிசையாழ்வார். கணி கண்ணன் அவருடைய சீடன். ஆழ்வாருடைய தெய்விக சக்தியைக் காஞ்சியில் அரசாண்ட மன்னன் அறிந்து, கணி கண்ணனை அழைத்து, தான் என்றும் இளைஞனாயிருக்கச் செய்யும்படி ஆழ்வாரைக் கொண்டு தன்மீது பாடல் பாடுவிக்கவேண்டினான். நாக்கொண்டு மானிடம் பாடாத ஆழ்வாரது பிரபாவத்தைக் கணிகண்ணன் கூறவே, அரசன் சினந்து, "நீங்கள் இந்நகரில் இருத்தலாகாது" என்று வெருட்டிவிட்டான். ஆழ்வாரிடத்துக் கணிகண்ணன் இதைக் கூறவே, ஆழ்வாரும், தாம் தங்கியிருந்த காஞ்சிப் பதியாகிய திருவெஃகாத் திருமாலிடம் சென்று,

**கணி கண்ணன் போகின்றான் ;**
**காமருபூங் கச்சி**
**மணி வண்ணா, நீ கிடக்க**
**வேண்டா ; —துணிவுடைய**
**செந்நாப் புலவன் யான்**
**செல்கின்றேன் ; நீயும் உன்றன்**
**பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்—**

என்று பாடினாராம். ஆழ்வார் முன்செல்ல, கணி கண்ணன் பின் செல்ல, பெருமாளும் தம்முடைய யோக நித்திரையை

விட்டெழுந்து, அரவணைப் பாயலைச் சுருட்டிக்கொண்டு பின் நடந்து நகருக்கு வெளியே சென்றுவிட்டாராம்.

**பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற**
**பச்சைப்பசுங் கொண்டலே**

என்று குமரகுருபர சுவாமிகள் இக்கதையை மிகவும் பாராட்டிப் பாடுகிறார். புலவருக்கும் அரசன் அளித்த தண்டனையைக் கடவுள்கூடப் பொறுக்கத் தயாராயில்லை.

ஆனல் கதை இதனேடு முடியவில்லை. திருமால் நகரை விட்டு நீங்கியதும், நகர் பொலிவிழந்தமை கண்ட மன்னன் கலங்கி, கணி கண்ணன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டானம். அவன் வேண்டுகோளின்படியே, ஆழ்வாரும் மனம் இரங்கி,

**கணி கண்ணன் போக்கொழிந்தான்**
**காமருபூங் கச்சி**
**மணி வண்ணா, நீ கிடத்தல்**
**வேண்டும்—துணிவுடைய**
**செந்நாப்புலவன் யான்**
**செல்லொழிந்தேன் நீயும் உன்றன்**
**பைந்நாகப் பாய்விரித்துக் கொள்—**

என்று தம் பாடலை மாற்றிப் பாடி, திருமாலைத் தம் பின் வரச் செய்து, திரு வெஃகாவில் மீண்டும் வந்து உறைவா ராயினர்.

இப்படியே மற்றொரு சம்பவம்; ஒருவனுக்கு விதித் திருந்த தண்டனையை அவனுடைய புலமை காரணமாக மாற்றி, அரசன் தன் உயிரையே கொடுத்துவிடுகிறன். 'நந்திக் கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்' என்பது பாட்டு. பல்லவமல்லன் நந்தி போத்தரையன் ஆண்ட காலத்தில் அவன் தம்பிக்கு அரசாட்சியின்மீது ஆசை பிறந்தது. தமையன் மீது எத்தனையோ போரிட்டும் வெல்லமுடியாமல், அவன் தோல்வியே அடைந்தான். பிறகு ஒரு யுக்தி செய்தான்.

நந்திக்குப் புலவர்கள் மேலும் கவிதைமீதும் அளவில்லாத ஆர்வமிருந்தபடியால், தம்பியானவன் சில காலம் பயின்று சிறந்த புலவனுகி, தமையன்மீது கலம்பகம் என்ற ஒரு பிரபந்தம் பாடி, அதை அவன் விரும்பிக் கேட்கும்படி செய்து, பிரபந்தம் பாடியதற்குப் பரிசாக தமையன் உயிர் துறக்கும்படியும், நாட்டைத் தனக்கு அளிக்கும்படியும் செய்தான் என்பது கதை. புலமைக்குத் தண்டனையளிப்ப தைக் குறித்த கதைகளுக்கெல்லாம் இது எவ்வளவு நேர் மாருனது ! ஓர் அரசன் தனக்குத் பகைவனு யிருந்தவ னுடைய புலமைக்குத் பரிசாகத் தன் நாட்டைக் கொடுத்ததோடல்லாமல், தன் உயிரையுமல்லவா கொடுத்து விடுகிருன் !

யாழோசையை அனுபவித்து மகிழ்ச்சியடைகிற அசுணமானது கொடிய ஓசையைக் கேட்ட மாத்திரத்தில் உணர்ச்சி மயங்கி உயிர்விடுமாம். இந்த அசுணத்தை ஒத்த வர், மணிமேகலை பாடிய புலவரான சீத்தலைச் சாத்தனர். போலிப் புலமையைக் காணவும் கேட்கவும் நேர்ந்தபோ தெல்லாம் மனம் நொந்து நொந்து தம் கையிலுள்ள எழுத் தாணியாலே தலையில் குத்திக் கொள்வாராம். இதனல் தலை புண்ணுகிச் சீழ் பிடித்துச் சீழ் மாருமல் இருந்ததனல், அவர் பெயரே சீத்தலைச் சாத்தனர் ஆகிவிட்டது! என்ன அருமை யான ரசிக உள்ளம் அவருடைய உள்ளம் !

நல்லதையும், போலியையும் பகுத்தறிந்து, போலியை வேண்டாமென்று தைரியமாய் ஒதுக்கத் தெரிந்த ரசிகர்கள் இன்று தமிழ்நாட்டுக்கு வேண்டும். இவர்கள் சாத்தனரா யிருந்து பயனில்லை; இவர்களுடைய தலைதான் சீழ் பிடிக்குமே யொழிய, மற்றவர்களுக்கு லாபமில்லை. பெயரைக் கேட்டவுடனே மற்றவர்கள் நடுங்கும்படியான ஒட்டக்கூத்தரும், வில்லிபுத்தூராருமே இன்று வேண்டிய வர்கள்—அல்லது திருக்குறளை மதிப்பிட்ட சங்கப்பலகை யிருக்கிறதல்லவா, அந்தப் பலகை கிடைத்தாலும் போதும்.

# 7. விலையாகாத புத்தகங்கள்

சமீபத்தில் ஒரு நாள் என் வேலைக்காரன் ஒருவன் கடைக்குப் போய் ஏதோ சாமான் வாங்கிக்கொண்டு வந்திருந்தான். சாமான் கொஞ்சம் ஈரமாக யிருந்தபடியால் அது வீட்டில் ஒரு புறம் தாழ்வாரத்தில் உலர்த்தி வைக்கபட்டிருந்தது. என் அறையிலிருந்து நான் ஏதோ எழுதிக்கொண்டிருந்த சமயம் தலையை தூக்கி ஜன்னல் வழியாகப் பார்த்தேன். கடைக்காரன் கட்டிக்கொடுத்த காகிதத்தில் விரித்து வைத்தபடியே சாமான் வெயிலில் காய்ந்து கொண்டிருந்தது.

அது என்ன காகிதம் என்பதைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் எப்படியோ எனக்கு உண்டாயிற்று. எழுந்து வெளியே போய்ப் பார்த்தேன். அது பெரிய வெள்ளைத் தாள்; "பெதர் வெய்ட் பேப்பர்" என்று சொல்லுகிறார்களே அப்படிப்பட்ட காகிதம். அதில் நல்ல 12 பாயிண்ட் பைகா எழுத்தில் "திக்லெட்" இடைவெளி விட்டு 20-எம் அளவில் புத்தகம் போல அழகாக அச்சிடப்பட்டிருந்தது. தமிழானபடியால் ஆவலோடு படித்தேன்.

சாமான் அவ்வளவையும் வேறு ஒரு தாம்பாளம் கொண்டுவரச்சொல்லி அதில் கொட்டிவிட்டு காகிதம் முழுவதையும் எடுத்தேன். அதில் 32 பக்கம் இருந்தது. ஒரு நாவலின் இடையிலுள்ள "பாரம்". மடித்திருந்ததேயொழியே ஓரம் கிழிக்கவுமில்லை, தைக்கவும் இல்லை, வெட்டவுமில்லை. பக்கத்தின் தலைப்பில் நடுவே பக்கம் 49 முதல் 64 வரை போட்டிருந்தது; புத்தகப் பெயர் போடவில்லை. முழுவதையும் படித்தேன். அது துப்பறியும் நாவலென்பது தெரிந்தது. "மாணிக்கம் பிள்ளை மறைந்த மாயம் அல்லது கோட்டூரில் கோரக் கொலை" என்பது அதன் பெயராயிருக்கலாம்.

காகிதத்தை எடுத்துக்கொண்டு உள்ளே வந்து உட்கார்ந்து சாவகாசமாக அதைப்படித்து முடித்தபோது பெயர் தெரியாத அந்த நாவலை எழுதிய அதன் ஆசிரியர்மீது எனக்கு அளவில்லா இரக்கம் ஏற்பட்டது. எவ்வளவு நாள் உண்ணாமல் உறங்காமல் இதை எழுதினரோ! எத்தனை தஸ்தா காகிதம்; எத்தனைப் புட்டி மை; எத்தனை பேனா செலவாயிற்றோ! எத்தனை சேர் காப்பி அல்லது எத்தனை பட்டைப் பொடி செலவாயிற்றோ! தம் நண்பர்களிடமோ மனைவியிடமோ எத்தனை பகுதிகளைப் படித்துக்காட்டி மகிழ்ந்தாரோ! புத்தக வெளியீட்டாளரிடம் எத்தனை முறை அதைச் சுமந்து சுமந்து சென்றாரோ! என்ன என்ன கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு அச்சாபீஸுக்கு அலைந்து புரூப் திருத்தினரோ! ஆனாலும் புத்தகமாக வெளியிடும் காலத்தில் இப்படிப்பட்ட கஷ்டங்களை யெல்லாம் மறந்து அவர் மனம் எவ்வளவு உற்சாகம் அடைந்திருக்கும்! ஆனால் இந்த உற்சாகம் எவ்வளவு நாளைக்கு? புத்தகம் விற்றால்தானே இந்த மகிழ்ச்சி வெளியீட்டாளருக்கு உண்டாகும்? அப்பொழுதுதானே ஆசிரியர் மகிழ்ச்சியும் நிலைத்து நிற்கமுடியும்?

பாவம் முடிவு என்ன ஆயிற்று? புத்தகம் விலையாக வில்லை. பைண்டான பாதி கடையிலேயே கட்டிக்கிடந்திருக்கிறது! மற்றப் பாதியும் அச்சுக்கூடத்திலேயே பைண்டாகாமல் கட்டிக்கிடந்திருக்கிறது. ஏன் என்று கேட்பாரில்லை. இந்த யுத்தம் காரணமாக, காகிதம் கிடைக்காமற்போனவுடனே எவ்விதக் காகிதமும் விலையேறிவிட்டது. அச்சுக்கூடக்காரர், கட்டிக்கிடந்த புத்தகத்தின் பாரங்களை வீசை கணக்காக நிறுத்து, சாமான் மடித்துக் கொடுப்பதற்காகக் கடைக்காரனிடம் போட்டுவிட்டார்; இதன் மூலம் அவர் தமக்கு வரவேண்டிய அச்சுக்கூலியை ஈடுசெய்து கொண்டார்.

ஆனால் புத்தகம் அச்சிட்ட காகிதத்தின் கிரயம் என்ன ஆகிறது? ஆசிரியர் கஷ்டப்பட்டு எழுதியதற்குள்ள கூலி என்ன ஆகிறது? கையிலிருந்த பணத்தையும் போட்டு

காகிதம் வாங்கிவிட்டு, அச்சுக்கூலி கொடுக்கவும் இயலாம லிருந்த ஆசிரியர் எப்படிக் காலட்சேபம் செய்வார்? புத்தகம் விற்கவில்லை என்பதனால் மனமுடைந்திருப்பார்; சந்தேக மில்லை. கையில் காசில்லாமையினால் சாப்பாட்டுக்கு வழி யின்றி உயிர் துறந்திருப்பாரோ ?

சாமான் சுற்றிய காகிதத்தையும் அதன் நிலையையும் கண்டபோது என் மனம் இப்படியெல்லாம் எண்ணிற்று. நான் கண்டும் கேட்டுமிராத அந்த ஆசிரியரை எண்ணி ஒரு சொட்டுக் கண்ணீரும் விட்டேன்.

ஏராளமாய் அச்சிட்டு ஏராளமாய் விலைபோகும் புத்தகங் களைப்பற்றித் தான் உலகம் பேசுகிறதே ஒழிய விலையே ஆகாத புத்தகங்களைப் பற்றியோ ஆசிரியரைப் பற்றியோ பேசுகிறதா ? வெற்றியைப் போல வெற்றி தருவது வேறொன்றுமில்லை என்று ஓர் ஆங்கிலப் பழமொழி சொல்லு கிறது. அப்படியானால் தோல்வி என்ன ஆகிறது ?

வால்டேர் என்ற பிரஞ்சு ஆசிரியரைக் குறித்த செய்தி ஒன்று எல்லோருக்கும் தெரியும். அவர் புத்தகம் ஒன்று வெளியாயிற்று. விற்பனை எப்படியிருக்கிறது என்றறிய வேண்டி அவர் பாரிஸ் நகரத்திலிருந்த தம் நூல் வெளியீட் டாளருக்குக் கடிதம் எழுதினார். "?" ஆகிய கேள்விக்குறி யொன்றுதான் அக்கடிதத்திலிருந்த விஷயம். மறுதபாலில் ஆச்சரியகரமான விற்பனை என்பதைக் குறிக்க "!" என்ற ஆச்சரியக்குறி மட்டும் எழுதிய கடிதம் வெளியீட்டாளரிட மிருந்து அவருக்கு வந்ததாம். அவருடைய புத்தகமே விற்பனையாகவில்லை என்று வைத்துக்கொள்ளுவோம்; அப்பொழுது உலகம் இப்படிப்பட்ட கடிதப்போக்கு வரத்தைப் பற்றிப் பேச இடமிருக்குமா ?

சமீப காலத்தில் வெண்டெல் வில்கி என்ற அமெரிக்கர் ஒரே உலகம் என்ற புத்தகம் எழுதினார். அவருடைய பெயர் பிரபலமாயிருந்தமை காரணமாகவும் ஏராளமாக விளம்

பாரம் செய்யப் பெற்றிருந்தமை காரணமாகவும், அது வெளி வந்த அன்றே லட்சக்கணக்கில் விற்பனையாயிற்ரும்.

இப்படியெல்லாம் வெற்றிகரமான விற்பனையுடைய புத்தகங்களைப் பற்றித்தான் பொதுவாக உலகம் பேசுகிறது. ஏன் அவை இப்படி ஏராளமாக விற்பனையாகின்றன ? ஒருவரும் சொல்ல முடியாது. உயர்ந்த தகுதி வாய்ந்த புத்தகங்கள் மட்டுமே அப்படி விற்பனையாகின்றன என்பதுமில்லை. பெரிய நாவல்கள், சிறிய கதைகள், பிரயாண நூல்கள் முதலிய பலவகைப் புத்தகங்கள் இப்படி விற்பனையாகின்றன. சாமானியமான துப்பறியும் கதைகளும் இப்படி விற்பனையானதுண்டு. விற்பனைக்கும் நூலின் தகுதிக்கும் அதிக சம்பந்தம் காணவில்லை. பெருவாரியாக விற்பனையான புத்தகங்கள் யாவும் சிறந்தன என்று கொள்ளமுடியாது. அப்படியே விற்பனையாகாதவை சிறந்தன அல்ல என்று அர்த்தமாகாது.

விலையாகாத புத்தகங்களைக் குறித்து உலகம் பேசாத போதிலும் அவற்றைக் குறித்துப் பேசுவதில் சுவை யிருக்கிறது. கடைகளில் சாமான் மடிக்க இவை உதவுவதைத் தொடக்கத்தில் பார்த்தோம். இந்த உபயோகம் இப்போதைய யுத்தத்தின் காரணமாகத்தான் ஏற்பட்டது என்று யாரும் எண்ண வேண்டாம். பண்டைய கிரேக்க நாட்டிலிருந்த அலக்ஸாந்திரிடீஸ் என்ற புலவர் சங்கத்தில் தம் நூல் அரங்கேருதுபோய்விட்டால் தாம் மனம் நொந்து நூலின் கையெழுத்துப் பிரதியை கடைக்காரனிடம் கொடுத்துப் பொட்டலம் கட்ட வைத்துக்கொள் என்று சொல்லிப் போய் விடுவராம்!

பிரான்ஸ் தேசத்திலிருந்த காதரினே என்ற புலவர் ஒருவர் சரித்திர சம்பந்தமான எண்ணற்ற நூல்கள் எழுதுவதில் பிரியமுள்ளவர். ஆனல் அவர் எழுதிய கதைப் புத்தகங்களை யாரும் வாங்கமாட்டார்கள். எனவே அவர் தம் புத்தகங்களைத் தாமே அச்சிட்டுப் போகுமிடமெல்லாம்

07,6 NAVI,P N5)



யையோடு கொண்டுபோவார். பழம் புத்தகக்கடைக்குப் போய் அங்கு உள்ள புத்தகங்களைப் புரட்டிப் பார்க்கின்ற பாவனையாகத் தம் கையில் உள்ளவற்றைப் புத்தகங்களிடையே செருகிவிட்டு வந்துவிடுவார். இப்படியாக அவருடைய புத்தகங்கள் எல்லாம் வெகு விரைவில் தீர்ந்துபோய் இரண்டாம் பதிப்பு மூன்றும் பதிப்பு என்று அச்சிட வேண்டியிருக்குமாம்!

கோலரிட்ஜ் என்பவர் ஒரு சிறந்த ஆங்கிலப் புலவர். வெர்ட்ஸ் வொர்த் என்பவர் அவரிலும் பார்க்கப் புகழ் வாய்ந்த புலவர். இருவரும் சேர்ந்து எளிய பாடல் தொகுதியொன்றை வெளியிட்டார்கள். விலையே போகாமலிருந்த அந்தப் புத்தகங்கள் எப்படியோ திடீர் என்று விற்பனையாகி விட்டன. அது பற்றி விசாரித்தபொழுது, புத்தகக் கடைக்காரன் பின்வருமாறு சொன்னார்.

"இந்தப் புத்தகங்கள் அத்தனையையும் மாலுமிகளே வாங்கினார்கள். அவர்கள் கோலரிட்ஜ் எழுதிய 'புராதன மாலுமி' என்ற பாடலைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார்கள். இந்தக் கவிதைத் தொகுதியைத் திறந்தவுடன் இதில் அந்தப் பாடல் இருந்தது. அதைப் பார்த்தவுடன், இந்நூல் முழுவதும் மாலுமிகளுக்குகந்த பாடல்களே உள்ளன என்றெண்ணி அவர்கள் வாங்கிச் சென்றார்கள். இதன் காரணமாகவே உங்கள் புத்தகம் விற்பனையாயிற்று" என்றார்.

கதை எப்படி? இவர்கள் வெளியிட்ட உயர்ந்த கவிதைப் பண்பு பொருந்திய பாவ பூரணமான பாடல் தொகுதி எங்கே! அதை மாலுமிகள் கப்பற்பாட்டு என்றெண்ணி ஏமாந்து போய் வாங்கிவிட்டார்கள் என்று சொல்லுவது எப்படியிருக்கிறது!

இந்தக் கோலரிட்ஜின் நண்பர் ஒரு பாதிரியார். அவர் புத்தகம் போட்ட கதையும் வேடிக்கையானது. "கடைத்தேறுவதைக் குறித்த புதிய கோட்பாடு" என்று அவர் ஒரு பெரிய புத்தகம் இரண்டு பாகங்களாக எழுதினார். இதை


TAMIL NADU ARCHIVES LIBRARY
110414

வெளியீட்டாளர் யாரும் வெளியிட இசையாததால் தம் செலவிலேயே வெளியிட்டார். புத்தகத்தின் போக்கைக் கண்டித்துப் பத்திரிகை மதிப்புரைகள் வெளிவந்தன. பார்த்த பாதிரியார், இருக்கட்டும், அடுத்த பதிப்பு வெளிவரும்போது இந்த மதிப்புரைக்காரர்களுக்குப் புத்திவரும் என்று தமக்குள் சொல்லிக்கொண்டார். இரண்டு, மூன்று வருஷங்கள் ஆயின. புத்தகம் விற்கும்படி கொடுத்த கடைக்காரனிடமிருந்து பணமே வரவில்லை. ஒருநாள் கடைக்குப் போனார். கணக்கைப் பார்க்கவேண்டும் என்று கேட்டார். சரியென்று கடைக்காரன் கணக்கை எடுத்துப் போட்டான். படித்தார்.

புத்தகத்துக்குக் காகிதவிலை இத்தனை பவுன் ; சரி அதிகமில்லை. அச்சுக்கூலி இத்தனை பவுன் ; கொஞ்சம்தான். அட்டை, தையல் கூலி—இவ்வளவு. விளம்பரம், மதிப்புரை, தபால் செலவு...சரி இருக்கட்டும். இவ்வளவும் வேண்டியதுதான் ; அடுத்தது என்ன ?—என்று பார்த்தார்.

" ஸெல்லரிட்ஜ் : மூன்று பவுன் " என்று கணக்கில் எழுதியிருந்தது. கடைக்காரனை அழைத்து இவ் விவரம் என்ன என்று விசாரித்தார். அவன் சொன்னான் : "ஆமாம். இதுதான் ஸெல்லரிட்ஜ்."

" என்ன இதுதான், ரொம்பவும் குறைவாயிருக்கிறதே !" என்று இன்னதென்று விளங்காமலே கேட்டார். " இவ்வளவு பெரிய புத்தகம்—இரண்டுபாகம் கொண்டது. ஆயிரம் பிரதி விற்றது. இவ்வளவுதானா ? மூன்று பவுன் தானா ?" என்றார்.

" ஐயா ! நான் சொன்னதை நீங்கள் தப்பாக எண்ணிக் கொண்டீர்கள். ஒரு புத்தகம் கூட விற்கவில்லை, விற்காதபடியால் புத்தகத்தைக் கடையிலிருந்து அப்புறப்படுத்திக் காகிதக் கிடங்கில் கொண்டுபோய் வைத்து விட்டோம். அதற்கு உரிய வாடகைதான் இந்த மூன்று பவுன் " என்றான் கடைக்காரன்.

என்ன செய்வார் பாதிரியார்! பதில் பேசாது புத்தகங்களைக் கொண்டுபோய்த் தம் வீட்டுப் பரணில் அடுக்கிவிட்டார். தம்மைப் பார்க்கவந்த நண்பர்களிடம் இரண்டு பாகத்தையும் கொடுத்து நகைச்சுவையோடு இந்தக் கதையைச் சொல்லி அனுப்புவாராம்!

இப்படி உள்ள கதைகளுக்கு அளவே இல்லை. தாமஸ் ஹார்டி என்பவர், சமீபத்தில் காலஞ்சென்ற ஆங்கில நாவலாசிரியர்; இணையில்லாப் புகழ்பெற்றவர். அப்படிப்பட்ட இவருடைய நாவல்கள்கூட முதலில் கேட்பாரற்றுக் கிடந்தன. 'நீலவிழி யிணைகள்' 'பசுமரத்தின் நிழலில்' 'முடிவான பரிகாரம்' என்ற நாவல்கள் ஐந்நூறு பிரதிகளே அச்சிடப்பெற்றன. (பிற்காலத்தில் இவருடைய நாவல்களெல்லாம் பதினுயிரக் கணக்கில்தான் அச்சிடப்பெற்றன என்பவை நினைவுகூரவேண்டும்.) அச்சிட்ட வெளியீட்டாளர் ஒவ்வொரு புத்தகத்திலும் இருபது பிரதிக்குமேல் விற்பனை செய்யமுடியவில்லை. பிறகு அவர் மீதி இருந்த அத்தனையையும் அப்படியே மடிக்காத காகிதமாகவே பொட்டலம் மடிக்க விற்றுவிட்டார். காகிதத்தை வாங்கிக்கொண்டு போனவன் கெட்டிக்காரன். புத்தகத்தை சாணித்தாள் அட்டைபோட்டுத் தைத்து, ஒன்று ஒன்றேகால் ஷில்லிங் வீதம் விற்றுவிட்டானும்!

உலகத்திலேயே மிகச் சிறந்த நாவலாசிரியர் என்று புகழ்பெற்ற ஹார்டி புத்தகங்களின் நிலையே ஒரு காலத்தில் இப்படி இருந்ததென்றால், மற்றவர்களைப்பற்றிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது?

# 8. மறதி

பாட்டி ஒருநாள் பையனைக் கடைக்கு அனுப்பினாள். "கடையிலே சர்க்கரை என்றைக்கு வருகிறது என்று விசாரித்துவிட்டுவா" என்று சொல்லி, ஒரு வேளை அவன் வழியில் தன் கூட்டாளிகளைக் கண்டால், கடைக்குப்போக வேண்டுமென்பதையே மறந்து விடுவானோ என்ற அச்சத்தால் அவன் வேட்டியில் ஒரு முடிச்சும் போட்டு அனுப்பினாள்.

பையன் போனான். வழியில் தன் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் பம்பரம் ஆடிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். இவனும் கூடச் சேர்ந்துகொண்டான். கொஞ்ச நேரமாயிற்று. வேட்டியிலிருந்த முடிச்சுக் கையில் தட்டுப்பட்டது. 'பாட்டி ஏதோ சொல்லியல்லவா முடிச்சுபோட்டனுப்பினாள்' என்பதுமட்டும் அவனுக்கு ஞாபகம் வந்தது. என்ன சொன்னாள் என்று வெகு நேரம் யோசனை செய்து பார்த்தான்; ஞாபகம் வரவில்லை. முடிச்சை அவிழ்த்துவிட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்துசேர்ந்தான்.

இந்த மாதிரி மறதி உலகத்தில் மிகவும் சாதாரணம். ஒருநாள் அவசரமாக ஊருக்கு ஒரு கடிதம் எழுதினேன். அப்போது நண்பரொருவர் வந்தார். பேசிவிட்டு அவர் திரும்பிப்போகும்போது, "இந்தக் கடிதத்தை வழியிலுள்ள தபால் பெட்டியில் போட்டுவிடுங்கள்" என்று அவர் கையில் கொடுத்தேன். அவரும் அதை வாங்கிக் கையில் பிடித்தபடியே போனார்.

என் கடிதத்துக்கு மூன்றுநாளில் பதில் வருமென்று எதிர்பார்த்திருந்தேன். நாள் ஆறாயிற்று; பதிலைக் காணோம். சந்தேகப்பட்டு நண்பர் வீட்டுக்குப் போனேன். அவரும் வீட்டில் இருந்தார்.

"கடிதம் கொடுத்தேனே, என்னவாயிற்று?" என்று கேட்டேன்.

“ ஏது கடிதம் ?” என்றார்.”

“ தபாலில் போடும்படி அன்றைக்கு நீங்கள் வந்த போது கையில் கொடுத்தேனே, அந்தக் கடிதம்... தபாலில் போட்டீர்களா ?”

கனவுகண்டு விழித்தவர்போல, நண்பர், “ அடாடா அந்தக் கடிதமா ? மறந்தேபோயிற்று......அன்றைக்குப் பாருங்கள்...” என்று சொல்லிக்கொண்டே, எழுந்து சட்டைப் பையிலிருந்து கடிதத்தை எடுத்துக் கொடுத்தார்.

கடிதத்தை இனி என்ன செய்வது ? அவர் சொல்லியதொன்றும் என் காதில் ஏறவில்லை. கடிதத்தைத் தபாலில் போடுவது சம்பந்தமாக எல்லோருடைய அனுபவமும் இப்படித்தானே ? தபால் பெட்டியில் போடவேண்டுமென்ற எண்ணத்துடனே போய்க்கொண்டிருப்போம். தெருமுனையில் உள்ள தபால்பெட்டியைத் தாண்டிப்போய்விடுவோம். பிறகுதான், கையில் கடிதம் இருப்பது ஞாபகம் வரும். ‘ சரி இவ்வளவுதூரம் வந்தாயிற்று. மயிலாப்பூருக்குத்தான் போகிறோமே. அங்கே போட்டுக்கொள்ளலாம் ’ என்று சமாதானம் பண்ணிக்கொண்டு பஸ்ஸில் ஏறுவோம்.

எத்தனை நேரம்தான் கடிதத்தைக் கையில் வைத்திருப்பது ? கண்டக்டரிடம் சில்லறை எடுத்துக்கொடுக்கும் போது, கடிதம் சட்டைப் பைக்குப் போகும். அவ்வளவுதான் : அங்கேயே இருந்துவிடும். நாம் மயிலாப்பூர் போய்விட்டுத் திரும்பிவந்து, மறுநாள் ஆபீஸுக்குப் புறப்படுகிற வரையில் அது பத்திரமாக அங்கேயே இருக்கும். சட்டையை எடுத்து மாட்டும்போதுதான், கடிதம் கையில் தட்டுப்படும். அன்றைக்கும் ஒருவேளை தபால் பெட்டிக்குப் போகாமல் மறுபடியும் பழையகதி நேர்ந்தாலும் நேரலாம்.

நாம் எவ்வளவுதான் ஜாக்கிரதையாயிருப்பதாகச் சங்கல்பம் செய்துகொண்டாலும், இந்தப் பொல்லாத மறதி எப்படியாவது வந்து நம்மை ஏய்த்துவிடும். போன டிசம்பர் மாதம் காசிக்குப் போவதற்காகப் புறப்பட்டேன்.

சென்ட்ரல் ஸ்டேஷனில் நண்பர்கள் வந்து வழியனுப்பி ஞர்கள். ரயில் புறப்பட்ட பின்,நான்கொண்டுவந்த சாமான் களை எண்ணினேன் ; பெட்டிகள்,படுக்கை, புத்தகமூட்டை, கூஜா, குடை, சாப்பாட்டுப் பொட்டலம், காசியிலுள்ள ஓர் உறவினருக்கு நண்பரொருவர் என்மூலம் கொடுத் தனுப்பிய காப்பித்தூள் வகையரா மூட்டையொன்று— எல்லாம் சேர்ந்து மொத்த உருப்படி ஒன்பது ; ஒருமுறை யல்ல, இரண்டுமுறை எண்ணி, ஒன்பது என்பதை உறுதி செய்துகொண்டேன்.

மறுநாள் மாலையில் இட்டார்சி என்ற ஜங்ஷனில் அலக பாத் போகிற வண்டிக்கு நான் மாறவேண்டும். இந்த வண்டி சீக்கிரத்தில் புறப்பட்டுவிடும் என்று நண்பர் கள் சென்னையிலேயே எச்சரித்திருந்தார்கள். போதாக் குறைக்கு நான்வந்த வண்டி இரண்டு மணிநேரம் தாம தித்து வந்திருந்தது. இட்டார்சி வந்தவுடனே அவசர அவசரமாய்ச் சாமான்களை இறக்கினேன். கூலியோ, இந் துஸ்தானிவாலா ; எனக்கோ, இந்துஸ்தானி தெரியாது. ரயிலில் கூட வந்தவரொருவர் அவனோடு இந்துஸ்தானியில் பேசிச் சாமான்களை அவன் தலையிலும் என் கையிலுமாக ஏற்றி அனுப்பினர். அலகாபாத் வண்டி போய்விடுமே என்ற கவலையினால், இறக்கிய சாமான்களை எண்ணாமலே கூலியும் நானுமாகப் போனோம். போகிற வழியில் எண் ணிப் பார்த்தேன் ; சாமான் எட்டுத்தான் இருந்தது. இன்ன சாமான் குறைகிறதென்பது தெரியவில்லை. முன்னே ஒன்பதென்று எண்ணியது. ஒருவேளை தவறாயிருக்கலாமோ என்று மனதில் யோசனை பண்ணியபடியே, காத்திருந்த வண்டியில் வந்து ஏறிக்கொண்டேன். அலகபாத் ரயில் கிடைத்ததே என்ற சந்தோஷத்தால் ஒரு சாமான் குறைந்த சங்கதியை மறந்தேவிட்டேன்.

சில நிமிஷ நேரமானதும் ரயில் புறப்பட்டது. கூலியை அமர்த்திவிட்ட நண்பர் ஓடோடியும் வந்தார்; அவர் கையில்

என் கூஜா இருந்தது. "என்ன ஐயா, இப்படியா சாமானை மறப்பீர்கள்? எண்ணிப் பார்க்கப்படாதோ?" என்று இரைந்துவிட்டு, தம் வண்டிக்குத் திரும்பிப்போய்விட்டார். அவர் கூஜாவைக் கொண்டுவந்து கொடுக்காமலிருந்தால், கொஞ்சநேரம் கழித்துச் சாப்பாட்டு மூட்டையை அவிழ்த்துவைத்துக்கொண்டு தண்ணீருக்குக் கூஜா இல்லாமல் எப்படி விழித்திருப்பேன் என்று எண்ணியபோது எனக்கு அவமானமாயிருந்தது.

இந்த மறதி என்பது மிகவும் பொல்லாதது என்பதில் சந்தேகமே இல்லை. கடைத்தெருவுக்குப் போவதற்காகக் கிளம்புகிறோம். "சிலேட்டுக் குச்சி வாங்கி வாருங்கள் அப்பா" என்று குழந்தை பல நாட்களாகச் சொல்லிவரும் விஷயத்தை இன்றைக்கும் ஞாபகமூட்டுகிறான். சரி, நாலு மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்ட நாம் எவ்வளவோ சுற்றிவிட்டு, என்ன வெல்லாமோ வாங்கிக்கொண்டு வீடு திரும்புகிறோம். பேனாவுக்கு மை, கில்லெட் பிளேடு, கடிதமெழுதக் காகிதம் முதலிய பல சாமான்கள். சிலேட்டுக் குச்சி மாத்திரந்தான் வாங்கவில்லை! மணி ஏழுக்குப் படுத்துத் தூங்கிவிடுகிற பையன், மணி எட்டாகியும் தூங்காமல், சிலேட்டுக்குச்சி வருமென்று எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறான். ஆனால், அப்பா வந்ததும், சிலேட்டுக் குச்சி வரவில்லை என்பதைக் காணும்போது, அவனுக்கு எப்படி இருக்கும்? குழந்தை விரும்புவதை வாங்கிக்கொடுக்க வேண்டும் என்பதுதான் நம்முடைய ஆசை. சிலேட்டுக்குச்சி வாங்கக் கூடாது என்பது நம் எண்ணமல்ல. ஏதோ சொற்ப மறதி. ஆனால் சிறு குழந்தைக்கு எவ்வளவு ஏமாற்றம்!

இப்படிப்பட்ட மறதிகள் நம் எல்லோருக்கும் உண்டு. இந்த மறதி இல்லாமலிருந்தால் நல்லது என்று நினைப்போமே தவிர, மறதியினால் நேர்ந்த பிழையைப் பெருங் குற்றமாய்க் கருதிவிடமாட்டோம்.

ஒரு பெரிய மனிதர், பெரியவர்கள் இரண்டுபேரை மறுநாள் மத்தியானம் தம் வீட்டில் விருந்துக்கு அழைத்திருந்தார். அவர் மிக்க வேண்டியவரானபடியால், இவர்களும் மறுக்கமுடியாமல் வருவதாக ஒப்புக்கொண்டார்கள். பதினொன்றேகால் மணிக்கு மோட்டாரில் வந்து இறங்கினார்கள். விருந்துக்கு அழைத்த பெரிய மனிதர் அப்போதுதான் சாப்பிட்டுக் கையலம்பிவிட்டு வந்துகொண்டிருந்தார். வந்த இருவரையும், "வாருங்கள் இந் நேரத்தில் என்ன விசேஷம், இருவரும் வந்தது? சாப்பாடாயிற்று?" என்று விசாரித்தார். விருந்தாக வந்த பெரியவர்களுக்கு எப்படியிருக்கும்! சாப்பாட்டை எதிர்பார்த்து வந்தவர்கள் சாப்பிட்டுக் கை துடைப்பவரிடம் என்ன பதில்தான் கூற முடியும்?

இவை யாவும் மறதியைப் பற்றிய பேச்சில் ஒரு பகுதிதான். இவை ஸ்தூலமான வாழ்க்கையைப் பற்றியவை. ஆனால், இப்படியே மறதியில் ஆன்மாவைப் பற்றிய செய்திகளும் சில இருக்கின்றன. அவைகளும் இப்படியே சுவையுடையனவாக இருக்கும். ஒரே ஒரு செய்தியை மட்டும் இங்குப் பார்ப்போம். உயிருக்குப் பொதுவாக இறைவன் இருக்கிறான் என்பது தெரியுமா? தெரியும் என்கிறார் ஆழ்வார். தம்முடைய நெஞ்சத்தையே பார்த்துச் சொல்லுகிறார். "இறைவன் இருக்கிறான்: இந்த விஷயம்தான் உனக்கு நன்றாய்த் தெரியுமே!" என்று ஆரம்பிக்கிறார். இறைவன் உளன் என்பதை யுணர்ந்த நெஞ்சம் நல்ல நெஞ்சம்தான்.

> **உளன் கண்டாய், நன்னெஞ்சே!**
> **உத்தமன் என்றும்**
> **உளன் கண்டாய்!**

நெஞ்சம், இறைவன் உளன் என்பதை உணர்ந்ததுதான்; ஆகவே கெட்ட நெஞ்சமல்ல, நல்ல நெஞ்சந்தான். ஆனாலும் மறந்துவிட்டது. மறந்த விஷயத்தை மீண்டும் ஞாபகம்

படுத்துவதற்காக ஆழ்வார், 'உளன்கண்டாய்' என்று இரண்டுமுறை அழுத்தமாகத் திருப்பிக் கூறுகிறார்.

மெத்தையிலே படுத்திருக்கிறோம். மிருதுவான படுக்கையில் இருக்கிறோம் என்ற எண்ணமே நமக்கு இருக்காது. ஒரு பக்கம் புரள்கிறோம்; புரண்டவுடன், இந்தப் பக்கத்திலுள்ள படுக்கை, நம் உடம்பில் படும்போதுதான், 'நாம் மென்மையான மெத்தையில் படுத்திருக்கிறோம்' என்ற நினைப்பு உண்டாகிறது.

இதேபோலத்தான் இறைவன் நம்மோடு இருக்கிறான் என்ற விஷயமும். அவனே, 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்'. நினைப்பவர் உள்ளத்திலே அவன் இருக்கிறான் என்ற விஷயத்தை ஆழ்வார் இப்போது ஞாபகமூட்டி, இறைவன் இருக்கிறான் என்று மீண்டுமொரு முறை வற்புறுத்திச் சொல்லுகிறார்:

**உளன் கண்டாய், நன்னெஞ்சே!**
**உத்தமன் என்றும்**
**உளன் கண்டாய் உள்குவார்**
**உள்ளத்(து)—உளன் கண்டாய்!**

சரி, இப்படி உள்குவார் உள்ளத்தில் உள்ளவனை இறைவன் எப்படிப்பட்டவன், எங்கெங்கெல்லாம் இருப்பவன் என்று கேட்கலாம் அல்லவா? இதற்கும் ஆழ்வார் விடை தருகிறார்.

உலகெங்கும்தான் அவன் இருக்கிறான்; பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கிறான் என்பார்கள் பக்தர்கள். பாற்கடலாகிய பிரபஞ்சவெள்ளத்தில் வியாபித்து நிற்கிறான்.

ஆனால், இப்படிச் சூக்ஷ்மமாக வியாபித்து நின்றால் போதுமா? கண்ணார அவனை ஓரிடத்தில் கண்டு அனுபவிக்க வேண்டுமென்று பக்தர்கள் ஆசைப்படுகிறார்கள். இதன் பொருட்டு, சர்வ வியாபியாகிய இறைவன், வேங்கடம்

(திருப்பதி) என்ற ஸ்தலத்திலே மூர்த்திவடிவமாகவும் காட்சி தருகிறான்.

" இப்படிப்பட்ட இறைவன் அவனே உள்குவார் உள்ளத்திலும் உள்ளான் என்பதை, எனது நல்லநெஞ்சமே! நீ அறிவாய். ஆனாலும் மறந்துபோய்விட்டாய். ஆகவே நான் இப்போது உனக்கு ஞாபகப்படுத்துகிறேன். நீ இதைக் கொஞ்சம் மறக்காமல் நினைவில் வைத்திருந்து சிந்தனை செய்வாயாக !"

இந்த பாவத்தில் ஆழ்வார் தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார் :

**உளன்கண்டாய், நன்னெஞ்சே !**
**உத்தமன் என்றும்**
**உளன்கண்டாய், உள்குவார்**
**உள்ளத்(து)—உளன்கண்டாய் !**
**வெள்ளத்தின் உள்ளானும்,**
**வேங்கடத்து மேயானும்,**
**உள்ளத்தின் உள்ளான் (என்று)**
**ஓர்.**

## 9. அறியாமை

நான்கு ஆண்டுகளுக்கு முன்னே மயிலத்தில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் இளைஞர் மகாநாடொன்று நடந்தது. சமாஜத்துப் பெரியோர் பலர் என்னிடம் அன்புடையவர்கள் ஆதலால், என்னை அந்த இளைஞர் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க வேண்டுமென்று கேட்டார்கள். வயதில் நான் இளையவனாயிருந்தது ஒரு காரணம்; சமயமென்றும் சாத்திரமென்றும் புத்தகங்களையும் ஏடுகளையும் போட்டு நான் அச்சமயம் புரட்டிக் கொண்டிருந்தது மற்றொரு காரணம். சைவத்திலும் சித்தாந்தத்திலும் இவன் நிபுணனாயிருப்பான் என்று அவர்கள் எண்ணிவிட்டார்கள் போலும் !

தலைமையும் ' வகித்தேன் ', சொற்பொழிவும் ' ஆற்றினேன்.' இவற்றிலெல்லாம் எனக்கு அப்போது மிக்க மகிழ்ச்சி. மகாநாடு நடந்து கொஞ்சநாள் கழித்து, ' நீங்கள் இந்தக் கருத்தைச் சொன்னீர்களல்லவா ? மிகவும் நன்றாயிருந்தது ' என்று நண்பர் யாராவது என்னைப் பாராட்ட நேர்ந்தபோதெல்லாம், என்னுடைய மகிழ்ச்சி அளவு கடந்து போய்விடும்.

இதையெல்லாம் இப்போது நினைத்தால் எனக்கே சிரிப்பாய்த்தான் இருக்கிறது. சமயத்தைப் பற்றியும் கடவுள் தத்துவத்தைப் பற்றியும் பேச எவ்வளவோ அனுபவம் வாய்ந்த பெரியோர்களும் அஞ்சுகிறார்கள். அந்தத் தத்துவம், ஒன்றா, பலவா ? அது, குறித்த ஒன்றுதானா ? அல்லவா? இருக்கிறதா ? இல்லையா ? இத்தகைய கேள்விகளுக்கெல்லாம் விடையளிக்க முடியாது. இவை யாவும் உண்டென்றுஞ் சொல்லலாம். இல்லையென்றும் சொல்லலாம். கடவுளாகிய நம்பி குடி வாழ்க்கையே இப்படி இருக்கும் போது, நமக்கு இங்கு என்ன பிழைப்பிருக்கிறது என்று ஞானிகள் எண்ணுகிறார்கள்.

இப்படிப்பட்ட ஞானியாக இல்லாமையால்தான், அன்று தலைமை வகிக்க நான் இணங்கிவிட்டேன், என்னை வந்து கேட்டதுபற்றி எனக்குப் பெருமைதான். யாருக்குத் தான் புகழுரையில் விருப்பமில்லை ?

ஆனல் சமயத்தைப் பற்றி எனக்குத் தெரியுமா ? வந்த வாறு ஏதோ ? போமாறெங்ஙனே ?—என்று தெரியாமல் அப்பர் சுவாமிகளே திகைக்கிறார். ஆகவே தெரியாதென்று ஒப்புக்கொள்வதற்கு (அன்று தலைமை வகித்திருந்தபோதி லும்கூட) இன்று நான் வெட்கப்பட வேண்டியதில்லை. தெரியாது என்று தைரியமாய் ஒப்புக்கொள்ளுகிறேன்.

நேற்று வீட்டில் என் தங்கைக்குக் கொஞ்சம் காய்ச்ச லடித்தது. ஏன், என்ன என்பது நமக்கு அவ்வளவு எளி தாக விளங்கக் காணேம். நாட்டு வைத்தியனுக்குச் சொல்லி யனுப்பினர்கள். அவன் வந்தான். வைத்தியன் என்றால், எவனே என்று மலைக்கவேண்டும். பரியாரி கலியன் மகன் குப்பன் ! எழுத்துக் கூட்டிக்கூட அவனுக் குப் படிக்கத் தெரியாது. வந்து தங்கையின் கைமீது மெல் லிய பட்டொன்றைப் போட்டு, கையைப் பிடித்து நாடி பார்த்தான். பார்த்துவிட்டு, "வாதம் கொஞ்சம் கனத்திருக் கிறது. ஒருவேளைமருந்தில் குணமாகிவிடும்" என்று சொல்லி, ஏதோ ஒரு பொடியை கொடுத்துவிட்டுப் போனன். அவன் சொன்னபடியே ஓமச்சாற்றில் அப்பொடியைப் போட்டுக் கொடுக்க, காய்ச்சல் போய்விட்டது.

எனக்கோ நாடியா, அதில் வாதமா, அது கனப்பதா ஒன்றும் தெரியாது. ஆகவே குப்பனுடைய அறிவையும் அவன் தந்த பொடியின் வேலையையும் கண்டு எனக்கு அளவுகடந்த ஆச்சரியந்தான்.

என்னுடைய மைத்துனன் ஒருவன் சிறு பையன். வைத்தியக் கல்லூரியில் படிக்கிறான். அவனைக் கேட்டால் இன்னும் எவ்வளவோ சொல்கிறான். "இந்தச் சுரம் இன்ன இன்ன காரணத்தால் வந்தது. இன்ன சரக்குகள் உடம்பில்

சேர்ந்தால் உடம்பு நிதானத்துக்கு வரும்" என்று சற்றுத் தெளிவாகவே இவன் சொல்லுகிறான். குப்பனைவிட இந்தச் சிறு பையன் அதிகமாகத் தெரிந்திருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் உயிர்ப் பொருள்களைக் குறித்த இரசாயனம் படிக்கும் மாணவனைக் கேட்டால், அவனுக்கு இன்னும் சில விவரங்கள் தெரிந்திருக்கின்றன. உடம்பில் என்னென்ன உலோகங்கள் வாயுக்கள் முதலியன சேர்ந்திருக்கின்றன, கொடுக்கும் மருந்தில் எவையெவை அடங்கியுள்ளன என்பனவெல்லாம் இவனறிந்த அளவு வைத்தியக் கல்லூரி மாணவனுக்குத் தெரியாது.

எனவே, இம்மூவரிடத்தும் உடம்பையும், மருந்தையும் பற்றிய அறிவு வெவ்வேறு வகையில் வளர்ந்தும் விரிந்தும் இருக்கக் காண்கிறோம்.

சின்ன விஷயமொன்று இப்போது ஞாபகம் வந்தது, சொல்லுகிறேன். ஒரு நாள் மாலை தஞ்சாவூர் ஸ்டேஷனில் ரயிலுக்காகக் காத்துக்கொண்டிருந்தேன். அப்போது என்னுடன் என் மனைவியும் குழந்தைகளும் இருந்தார்கள். சிறு பெண் ஒருத்தி பூ விற்றுக் கொண்டிருந்தாள். பூக்காரப் பெண்ணின் தந்திரத்தைச் சொல்லவேண்டுமா? குழந்தைகள், அதிலும் பெண்களைப் பார்த்துவிட்டால், சுற்றிச் சுற்றி வருவாளே தவிர நாம் பூ வாங்கிக் கொடுக்காதவரையில் நம்முடைய மனைவிகள் அல்லது குழந்தைகள் தான் ஆகட்டும், நம்மை விடுவார்களா? ஆகவே வேறு வழியின்றி அவளைக் கூப்பிட்டேன்.

அவள் வந்தாள். ஏதோ கொஞ்சம் பேரம் பண்ணி ஓரணாவுக்குப் பூ வாங்கினேன். பூ மல்லிகைப் பூ என்று நினைத்துக் கேட்டேன். அவளோ, "இது மல்லிகைப் பூ அல்ல, இது பிச்சிப் பூ" என்றாள். நான் விடவில்லை. பள்ளிக்கூடத்திலே மரஞ் செடி கொடிகளைப்பற்றி எட்டில் படித்த

படிப்பு லேசில் என்னை விட்டதாக இல்லை. ஆகவே நான் கற்ற பாடத்தை அவளிடம் ஒப்புவிக்க ஆரம்பித்தேன்.

“இல்லையில்லை. இது மல்லிகைப் பூதான், பார். இதன் இதழ்கள் விரிந்துள்ள முறையும், இதன் நிறமும் மணமும் இது மல்லிகை என்பதைத்தான் காட்டுகின்றன. மற்றெந்தப் பூவும் இப்படியிராது. அதன் தோற்றமும் இப்படியிராது. தோற்றமே வேறு மாதிரியிருக்கும்” என்று ஆரம்பித்து, மல்லிகையைப் பற்றி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்து முடித்தேன். நான் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயராயிருந்து அவள் என்னிடம் பாடம் படிக்கும் மாணவியாயிருந்தாலும் இவ்வளவு விரிவாகச் சொல்லி யிருக்க மாட்டேன்.

ஏதோ தெரியவில்லை. அந்தப் பூக்காரப் பெண் அந்நேரத்தில் அந்த ஸ்டேஷன் பிளேட்பாரத்தில் என் பிரசங்கம் முழுவதையும் பாவம் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். பிறகு நிதானமாக அவள் சிரித்துக் கொண்டே என்னை நோக்கிச் சொல்லலானாள் :

“சாமி நீங்கள் என்னமோ பாடம் ஒப்பிச்சீங்க, அதெல்லாம் சரிதான். நீங்கள் சொன்னது மல்லிகைப்பூதான். மல்லிகைப் பூ என்றால்—அதிலே எத்தனை சாதி—உங்களுக்குத் தெரியுமா ? இதோ இருக்கிறதே இந்தப் பிச்சிப்பூவும் அதிலே ஒரு சாதி, இன்னும் மற்ற சாதியெல்லாம் சொல்லுகிறேன் கேட்கிறீங்களா ?” என்று சொல்லிவிட்டு, மடமடவென்று அடுக்கு மல்லிகை, நித்திய மல்லிகை, குண்டு மல்லிகை, குடமல்லிகை, காட்டு மல்லிகை, கஸ்தூரி மல்லிகை, மவ்வல் சாதி மல்லிகை முதலிய பெயர்களையெல்லாம் அடுக்கினாள். கடைசியாக, “சாமி மல்லிகையிலேயே மஞ்சள் மல்லிகை தெரியுமா உங்களுக்கு ? இராம பாணம் கேள்விப்பட்டிருக்கிறீர்களா ?” என்றாள்.

நான் திக்குமுக்காடிப் போனேன். மல்லிகை எனக்குத் தெரியுமென்று சொல்லப்போக அதன் விளைவு

இது! அடேயப்பா எத்தனை சாதிதான் உண்டு இந்த மல்லிகையில்!

கடைசியாக அவள் இன்னொரு பாணத்தை விட்டாள். "சாமி மன்மத பாணம் வேணுமா உங்களுக்கு?" என்றாள்.

நான்தான் என்ன செய்யக்கூடும்? அவளோ சிறு பெண், எளிமையான ஒரு பூக்காரிதான் என்றெண்ணி அவளிடம் என் திறமையைக் காட்டப் போக, அவள் இப்படியெல்லாம் கேட்கிறாளே என்று என் மனத்தினுள்ளேயே ஒரு பரிதாபம். நல்ல காலமாக அவள் "அதுவும் மல்லிகையிலே ஒரு சாதிதான். சாமி என்னமோண்ணு நெனச்சுக்காதீங்க" என்று சொல்லிக்கொண்டே அப்பால் போய்விட்டாள்.

என் னுள்ளத்திலிருந்தும் ஒரு பெரிய சுமை நீங்கிற்று. கண்ணும் கொஞ்சம் திறந்தது. என்னவோ எல்லாவற்றையும் தெரிந்துவிட்டோம் என்ற செருக்கு இந்தச் சிறு பெண் காரணமாக நீங்கிற்றல்லவா? மல்லிகையைப் பற்றி அவள் அறிந்துள்ளதை நோக்கும்போது எனக்குத் தெரிந்தது எவ்வளவு அற்பம்? ஒன்றுமே தெரியாது என்று சொல்லிவிடலாம். ஆயினும், தெரியாது என்பதையே நான் இதுவரை தெரிந்துகொள்ளவில்லையே! ஆம் தெரியும் என்ற செருக்கு மிகவும் பொல்லாததுதான். சந்தேகமில்லை. எல்லாம் தெரியும் என்றெண்ணியிருந்த ஔவையார், கேவலம் ஒரு மாட்டுக்காரப் பயலிடம் தெரியவில்லை என்று சொல்லித் தலைகுனியவேண்டி வந்ததல்லவா? "பாட்டி சுடுகிற நாவற்பழம் வேண்டுமா, சுடாத நாவற்பழம் வேண்டுமா?" என்று கேட்டபோது ஔவையாருக்கு விளங்கவில்லை. பிறகு மணல் ஒட்டிய பழம் சுடுகிற பழம் என்றும், மணல் ஒட்டாத பழம் சுடாத பழம் என்றும் அவன் வேடிக்கையாக விளக்கிக் காட்டியபின்னரே ஔவையாருக்குக் கண் திறந்தது.

ஆகவே இவ்வளவிலும் உண்டான கோளாறு என்ன? அறியாமையைக் கண்டு ஏற்பட்ட அச்சம். 'தெரியாது' என்று ஒப்புக்கொண்டுவிட்டால் குறைந்துபோய் விடுவோமே என்று எல்லோருக்குமே அச்சந்தான். இந்த அச்சம் அவசியம்தானா? இது நியாயமாகுமா?

உலகம் எவ்வளவோ விரிந்து கிடக்கிறது, அதிலுள்ள பொருள்களின் வகை, தொழில்களின் வகை எத்தனை எத்தனையோ. மக்களுடைய ஆயுட்காலம் மிக மிகக் குறைவுதான். ஒருவர் எவ்வளவுதான் அறிவிற் சிறந்தவராயிருந்தபோதிலும், ஆற்றல் மிகுந்தவரா யிருந்தபோதிலும், எவ்வளவுதான் அவர் அறிந்துகொள்ள முடியும்? கல்வி கரையில, கற்பவர் நாள் சில, மெல்ல நினைக்கில் பிணி பல என்பது பழைய வாக்கியம். பிணி பலவற்றுக்கு இரையாகாமல் இருந்தாலும் ஒருவர் பலவற்றையும் அறிதல் இயலாத காரியம். அப்படியே ஒரு பொருளைப் பற்றியுள்ளவையனைத்தையும் முடியக் கண்டேன் என்று சொல்வதும் ஒருவருக்கு இயலாத காரியந்தான்.

செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது என்றமாதிரி, எத்தனையோ ஆயிரம் செலவு செய்துதான் பட்டம் கிடைத்தது உண்மைதான். ஆனால் படித்து அறிந்திருக்கிறேன் என்ற உறுதியாக நான் எண்ணியிருந்த விஷயத்தில், கேவலம் ஒரு சிறு பெண் எவ்வளவு அதிகமாகத் தெரிந்து வைத்திருக்கிறாள்! அவள் பெற்றிருக்கும் அறிவை நோக்கும்போது, நான் அறிந்துள்ளது ஒன்றுமேயில்லைதானே? ஆனால் அவள் அறிந்துள்ளதுதான் அவ்வளவு அதிகமாகுமா? கவனித்துப் பார்த்தால் இல்லையென்பது தெரியவரும். மல்லிகையைப் பற்றிச் சிறு பெண்ணாகிய அவளுக்குத் தெரிந்திருப்பதைவிட அதே தொழிலில் நெடுங்காலமாய்ப் பழக்கப்பட்டிருக்கும் தோட்டக்காரனை அவளுடைய தந்தைக்கு எவ்வளவு அதிகமாகத் தெரியும்?

அவனோடு ஒப்புநோக்க அவளுக்குத் தெரிந்தது சொற்பந் தான்.

இப்படியே நெடுகிலும் சொல்லிக்கொண்டு போக லாம். ஒருவரை நோக்க ஒருவர் அறிவு மிகுதியாகிக் கொண்டேயிருப்பதைக் காண முன்னவருக்கு வெட்கமும் அச்சமும் உண்டாகாமலிருக்க முடியாது. நம்மவர்கள் இதைக் குறித்து மிகவும் சிந்தித்திருக்கிறார்கள். சிந்தித்துச் சிந்தித்து இந்த அறியாமையைக் குறித்து யாரும் பின்னடைய வேண்டுவதில்லை என்று முடிவு செய்திருக்கிறார்கள். கலைகள் யாவற்றுக்கும் தலைவியான கலைமகளைப் பற்றிய கற்பனையை இங்கு நினைவுகூர்வோமானால் இதன் உண்மை விளங்கும். சரசுவதியின் திருவுருவத்தைப் பார்த்தால் ஒரு கையில் ஏட்டுச்சுவடி யிருப்பதைக் காணலாம். இந்தியநாட்டு மக்கட் சமுதாயம் தோன்றிய காலந்தொட்டு வழிபட்டு வருகின்ற சரசுவதி தேவியே இன்னும் கைமீதிற் புத்தகமேந்திக் கற்று வருகின்றாள் என்பது நம்மவர் கற்பனை. கற்றது அவ்வளவு சொற்பந்தான். கற்க வேண்டியதோ மிக அதிகம்.

" கற்றது கை மண்ணளவு கல்லாதது உலகளவு என்று உற்ற கலை மடந்தை ஓதுகிறாள் " என்ற தனிப்பாடல் மேற்கூறிய கற்பனையின் உட்கருத்தை நமக்குத் தெரிவிக்கிறது. ஆகவே கலைமகளே மேலும் கற்று வருகின்றாள் என்ற கருத்து வழங்கும்போது, அறியாமையைக் கருதி அஞ்ச வேண்டியதில்லை.

இனி கடைசியாக, முதலில் நாம் தொடங்கிய சமயத் துறைக்கே வருவோம். உலகியல் பற்றியே இந்த அறியாமை நம்மை இந்த நிலைமையில் வைத்திருக்கும்போது, சமயத் துறையில் இதன் ஆதிக்கத்தைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? அவன் திருவருளை வேண்டித் தொழுவோம் என்று

எண்ணினல் இந்த அறியாமை வந்து குறுக்கிடுகிறது. அஞ்ஞான மேலீட்டினலே ஒருவன், தான் என்பதை அறவே விலக்கிவிட முடியவில்லை. தான் என்பது எப்போது அகலவில்லையோ, அப்போது அங்குத் தலைவனுக்கு இடமேது ?

இதை எண்ணி எண்ணி ஒரு பக்தர் பெரிதும் கவலையடைந்தார். விண்ணுலகத்தையும், பூவுலகத்தையும் தன் இரண்டு திருவடிகளால் அளந்து ஆட்கொண்ட நாராயணனை வழிபடுவதற்கு இவ்வறியாமை வந்து குறுக்கே நிற்கிறதே என்று எண்ணிப் பார்த்தார். இவ்வறியாமைக்கு என்ன செய்யலாமென்று ஆலோசித்தபோது அவருக்கு எளிதான ஒரு வழி புலப்பட்டது.

இறைவனை வழிபடுவதற்குப் பூவும் இலையுமா வேண்டும்? அல்லது தூப தீபங்களா வேண்டும் ? கனி வகைகளும் பிற நைவேத்தியங்களுமா வேண்டும்? இவை கிடைக்கவில்லையே என்று அஞ்சவேண்டுமா ?

இவை யொன்றும் வேண்டுவன அல்ல. அவனே கருணைக்கடல். பயனை எதிர்நோக்காது உலகுக்கு உதவியே செய்துவரும் கருமேகத்தின் நிறத்தையல்லவா நாராயண மூர்த்தி தன் நிறமாய்க் கொண்டிருக்கிருன் ? எனவே கவலை எதற்கு ? அவனை ஆராதிப்பதற்குத் தமக்கென்று ஒன்று இல்லாமலா போய்விட்டது ? இந்த உடல் பொருள் ஆகிய யாவும் அவன் தந்தது. ஆகவே அவன் தந்ததை அவனுக்கே தருவது, வெல்லப் பிள்ளையாரைக் கிள்ளிப் பிள்ளையாருக்கே நைவேத்தியம் செய்வது ஒக்கும். எனவே ஆராதனைக்கு வேறு பொருள் வேண்டும்.

இறைவனே அறிவு மயமாயிருப்பவன். ஞானமயனுன அவனிடம் அஞ்ஞானம் பொருந்தாது. ஆகவே தம்மிடமுள்ள அஞ்ஞானமாகிய அறியாமை ஒன்று, தமக்கே சொந்தமான பொருள். ஆராதனைக்கு இப்பொருளைத் தவிர, வேறு சிறந்த பொருள் ஒன்றும் இருக்கமுடியுமா ?

நாராய ணுய
நம என்று விண்ணேடு
பாராளும் பாதம்
பணிந்தேத்து மா(று) அறியேன்
காராரு மேனிக்
கருணுகர மூர்த்திக்(கு)
ஆராதனே என்
அறியாமை ஒன்றுமே!

எவ்வளவு அருமையான ஆராதனே !

கருணுகர மூர்த்திக்(கு)
ஆராதனே என்
அறியாமை ஒன்றுமே !

# 10. புதுமைத் தமிழ்

இது பாரதி யுகம்.

பாரதி காலஞ் சென்று இப்போது இருபத்தைந்து ஆண்டுகளாகின்றன. இந்தக் காலம் நெடுகிலும், இலக்கியத்தின் பல்வேறு துறைகளிலும் அவரைப் பின்பற்றிய போக்கே எழுந்திருக்கிறது. சிறப்பாகச் சமீப காலத்தில் தமிழின் போக்கு முழுமையும் அவருடைய போக்கைத் தழுவியதாகவே இருக்கிறது. சிறுகதை, நீண்ட பெருங் கதையான நாவல், கட்டுரை, கவிதை—எங்கும் பாரதியின் போக்கையே காண்கிறோம். உதாரணமாகக் கவிதை என்று வந்தால், கவிதையின் பொருள், சொல்லமைப்பு, உருவம், கற்பனை முதலான எல்லாவற்றிலும் ஆசிரியர்கள் பாரதியைப் பின்பற்றுகிறார்கள். தங்கள் பெயரைக் கூட பாரதியின் பெயரோடு தொடர்புபடுத்தி அமைத்துக் கொள்வதில் இவர்களுக்குத் தனியான ஒரு விருப்பம் இருக் கிறது.

பொதுவாக வாழ்க்கையில் இது இயற்கை. சிறந்த வாழ்க்கை வேண்டுமென்று விரும்புவோர் ஏதேனும் ஓர் லக்ஷ்யத்தையோ, லக்ஷ்ய புருஷன் என்று தாங்கள் கருதிய ஒருவனையோ பின்பற்றித் தங்கள் வாழ்க்கையை அமைத் துக் கொள்வார்கள். பாரதியார், நாட்டுப்பற்று, மொழிப் பற்று என்ற வெறியாலும், நிலைகெட்ட இந்த நாட்டு மக்கள் வாழ்க்கையை எண்ணியெழுந்த உள்ளக் குமுறலா லும் தமிழ் மக்களுடைய உணர்ச்சியைத் தட்டி எழுப்பினர். உணர்ச்சி பெற்றெழுந்த மக்கள் அவருடைய சொல்லையும் துன்பம் நிறைந்த அவருடைய வாழ்க்கையின் தூயபண்பை யும் தங்கள் லக்ஷ்யமாகக் கொண்டதில் வியப்பில்லை.

அரசியலிலே அடிமைத்தனம் நீங்கவேண்டும் என்ற புதிய விழிப்பும், சுதந்திரம் வேண்டும் என்ற தணிக்க முடி யாத வேட்கையும் இன்றைய தேசிய வாழ்வின் உயிர் நாடி.

இந்த உயிர் நாடியின் துடிப்பைப் பிரதிபலிப்பனவா யுள்ளன, பாரதியின் பாடலும் வசனமும். எனவே, அவற்றில் நம் மக்களுக்கு இன்றுள்ள ஈடுபாட்டுக்கு எல்லையே இல்லை. 'பாட்டுக் கொரு புலவன் பாரதி' என்றும் சொல்வதில் எவ்வளவோ பொருளிருக்கிறது. மக்கள் உள்ளத்திலெழும் வேட்கையைச் சிறந்த உருவம் கொடுத்து வெளியிடுகிறான் கவிஞன். தாங்கள் மனத்துக் குள் எண்ணி எண்ணிச் சொல்ல முடியாமல் குமுறிக் கொண்டிருந்தவையெல்லாம் கவிஞன் மிகவும் சுவையும் வேகமும் பொருந்தக் கவியில் அமைத்து வெளியிடும்போது, மக்கள் அதனிடத்தில் அளவின்றி ஈடுபடுவது இயற்கை.

இந்த ஈடுபாட்டின் பயனாக, நாம் பாரதி நாமத்தை இன்று மனமாரப் போற்றுகிறோம். இந்தப் போற்றுதலே வளர்ச்சிக்கு அறிகுறியாகும். வீரனையும், கவிஞனையும் போற்றி வழிபடாத ஒரு சமுதாயத்தில் செம்மையான வளர்ச்சியிருக்க முடியாது. பாரதியை முன்னமே சரியாகப் போற்றா விட்டாலுங்கூட, இப்போது சரியாக உணர்ந்து போற்றுகிறோம் என்பது, நமது சமுதாயம் செம்மை யான நெறியில் வளர்ச்சி பெறுகிறது என்பதைக் காட்டு கிறது. எனினும், போற்றுதலுக்கும் வழிபாட்டுக்கும் ஊடே ஒரு தூற்றுதலும் இடம் பெற்றுவருகிறது. இது சிறிதும் பொருத்தமன்று, விரும்பத் தக்கதுமன்று.

பெண்ணுரிமை, பெண் கல்வி, பெண்ணுக்கு விடுதலை என்ற கருத்துக்கள் ஓங்கி வளருகின்ற இந்நாளில், 'ஏட்டை யும் பெண்கள் தொடுவது தீமையென்று எண்ணியிருந்தவர் மாய்ந்துவிட்டார், வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்' என்ற பாரதியாரின் கருத்துக்கள் எவ்வளவோ ஊக்கமளிப்பன வாயிருக்கின்றன. இத்தகைய நோக்குடன் பண்டையிலக் கியத்தை ஆராய்வோர் கூற்றுக்கள் பலவிதமாயிருக் கின்றன.

'உண்மையான காதல் தத்துவமானது சங்க நூல்களில் அமைந்திருக்கிறது. பின்னர் வந்த தமிழிலக்கியத்தில் உண்மைக் காதலுக்கு இடமில்லாமல் பொய்யும் வழுவும் புகுந்துவிட்டன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் சென்று, பாரதியார் பாடல்களில்தான் உண்மையான காதல் தத்துவம் மீண்டும் தலைகாட்டுகிறது' என்பது ஒரு சாரார் கூற்று. இது உண்மைக்குப் புறம்பானது என்பதை அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. ஆழ்வார் பாடல்கள், நாயன்மார் பாடல்கள், கம்பராமாயணம் என்பவற்றில் தோய்ந்தெழுந்தவர் பாரதியார். பரம்பொருளை வழிபடு முகத்தால் அடியவர்கள் கூறும் காதல் தத்துவமானது, அடியவரும், இலக்கிய ரசிகரும் தெவிட்டாது இன்புற்று வருவதொன்று. வால்மீகருடைய காவியத்தில் தமிழர்தம் காதல் தத்துவத்தைப் பெய்து வகுத்துத் தந்த கதையின் சுவை தமிழ்நாடு நன்குய் அறிந்தது. எனவே, சங்க நூலுக்கும், பாரதி பாடலுக்கும் இடைப்பட்ட காலத்தில் காதல் சிறப்புப் பெறவில்லை என்பாரது கூற்று மெய்யானதன்று.

'கம்பருக்குப் பின் தமிழிலக்கியம் வறண்டுபோன பாலைவனமாயிருக்கிறது. இடையிடையே சில பசும்புற்றரைகள் காணப்படலாம். மற்றப்படி, பாரதி வரையில் எல்லாம் ஒரே பாலைவனம்தான். மற்றப்படி பாரதி ஒருவரே கோபுரம் போலிருக்கிறார்' என்பது மற்றொரு வகையான கூற்று. பாரதியாரைப் புகழ்வதற்காகவோ, கம்பரைப் புகழ்வதற்காகவோ இவ்விதம் கூறுவது பொருத்தமாகாது. இன்றைய அரசியல் நிலைமையில் மக்களுள்ளத்தில் கொதித்தெழுந்த சுதந்திரக் கனலின் வெப்பமிக்க பொறியே பாரதியாவார். நாட்டின் நிலைமை எப்போதும் ஒரே மாதிரி இருந்ததில்லை, இருப்பதுமில்லை. காலத்துக் கேற்பக் கவிஞனும் தோன்றுகிறான்; மாறுகிறான். கம்பராமாயணம் போன்ற காவியம் பாரதியார் செய்ய

வில்லையே என்று இதுவரை நாம் குறை கூறுவதில்லை. சிறந்த கவிஞர், நம் காலத்தவர் என்ற காரணங்கள் பற்றி இவரை நாம் ஏற்கிறோம்; கொண்டாடுகிறோம். காலந் தோறும் இவர் போலவே கவிஞர் தோன்றியிருக்கிறார்கள். சாமானியப் புலவர்களுமிருந்திருக்கிறார்கள், பெருங் கவிஞர் களுமிருந்திருக்கிறார்கள். இவர்கள் பரம்பரையில் வந்த பெருங் கவிஞரே பாரதியார். இவரைப் புகழும் பொருட்டு மற்றவர்களை இகழ்வதோ, வேறெவரும் இல்லையென்று சொல்வதோ, அவசியமில்லை.

இந்த நிலைமையில், பொதுவாய் வழங்கும் மற்றோர் அபிப்பிராயமே இங்கு கவனிக்கத் தக்கது. புத்தக உற்பத்தி பெருகியுள்ள இக்காலத்தைத் தமிழின் மறுமலர்ச்சிக் காலம் என்று கூறுகிறார்கள். உண்மையான மறுமலர்ச்சி பெரிதும் விரும்பத்தக்கது, வரவேற்கவேண்டுவது. இன்றைய தமிழிலக்கிய மறுமலர்ச்சியின் சிறப்பான அம்சம் சிறுகதை இலக்கியம் என்று சொல்கிறார்கள். பண்பட்ட உள்ளமானது, ஆழ்ந்த அனுபவத்தின்மேல், தான்பெற்ற இன்பத்தையோ, வேதனையையோ, எக் காலத்துக்கும் பொருந்தக்கூடிய முறையில் எடுத்துச் சொல்லும்போது, அவ்வனுபவத்துக்கு அடிப்படையாயுள்ள உண்மைத் தத்துவமானது, வேதனையைக்கூட இன்பமாக மாற்றிப் படிப்போருக்குப் பேரிலக்கியமாக்கிவிடுகிறது. அனுபவத்தின்மூலம், என்றும் குன்றாத உண்மைத் தத்துவமானது அழகுபட வெளிப்பட்டு விளங்குமாயின், அவ்வெளியீடு எதுவாயிருந்தால்தானென்ன? கவிதையாயினும், காவியமாயினும், கட்டுரையாயினும், கதையாயினும் ஒன்றுதான்; சிறுகதையும் பேரிலக்கியம் ஆகத்தான் ஆகிறது.

ஆனால், இலக்கியம் என்று சொல்லிவிட்டால் மட்டும் பயனில்லை. இலக்கியம் என்பது, உயர்ந்த ஒன்றுக்குப் பெயரெழுதித் தொங்கவிடுவதன்று. ஆழ்வார் நாயன்மார் பாடல்களும், கம்பராமாயணமும், அருணகிரிநாதர் பாட

லும், பரஞ்சோதியார் பாடலும், தாயுமானவர், இராம லிங்கர் பாடலும், இலக்கியம் என்று மற்றொருவர் சீட்டு எழுதி ஒட்டவேண்டியதில்லை. மக்கள் உள்ளத்தில் இவற் றின்பால் ஏற்பட்டுள்ள கவர்ச்சியே இவை பேரிலக்கியம் என்பதற்குச் சான்று, அத்தாட்சிப் பத்திரம். இவ்விதமே, பாரதி பாடலும், இலக்கியம் என்கிறோம்—மக்களுக்கு அதன்பாலுள்ள ஈடுபாடுபற்றி.

'இதுபோலவே, சிறுகதையெல்லாம் இலக்கியம் என்று சொல்லலாமல்லவா !' என்பது கேள்வி. எண்ணற்ற பேர் இன்று கதையெழுதுவதைத் தொழிலாகக் கொண் டுள்ளனர். ஆகவே, கதையெல்லாம் இலக்கியந்தான் என்று சொல்லிவிட்டால், எல்லோருக்கும் மகிழ்ச்சிதான்.

இருந்தபோதிலும், உண்மையையும் சிறிது கவனிக்க வேண்டும். பாட்டெழுதியவர்கள் யாவரும் புலமை மிக்க கவிராயர்களா யிருந்திருக்கலாம்; எல்லோரையும் அருங் கவிஞர் என்று நாம் ஒப்புக்கொள்வதில்லை. ஆயிரம் கவிராயருள் ஒருவரே கவிஞராயிருப்பது அனுபவத்தில் காண்கிறோம். காரிகை கற்றுப் பாடியதெல்லாம் கவிதை யாவதில்லை ; எதுகை மோனை, சீர் தளை பிழையாத வெறுஞ் செய்யுளாகத்தான் இருக்கும். வரப்பிரசாதத்தினல்தான் கவிஞன் பிறக்கிறான், பாடுகிறான், இலக்கியம் பிறக்கிறது. இவ்வுண்மை எல்லோரும் அறிந்து ஒப்புக்கொள்வதால், இதை விரித்துப் பேசுவது அவசியமில்லை.

இன்றைய எழுத்துலகத்துக்கும் இவ்வுண்மை பொருந் தும். பேனா பிடித்தவர்களெல்லோரும் இன்று எழுத் தாளர். இதில் தவறு ஒன்றும் இல்லை. இதுவே ஓரளவுக்கு வளர்ச்சிக்கான அறிகுறி. விஞ்ஞானிகள் பல்லாயிரக் கணக்கான சோதனைகள் நடத்துகிறார்கள். இவற்றுள் பெரும் பகுதி பயனற்றுப் போகிறது. அபூர்வமாய்ப் பதினாயிரத்தில் ஒரு தடவைதான் பேருண்மையொன்று புலப்படுகிறது. இதே விதமாகத்தான் எழுத்துலகத்திலும்.

பல்லாயிரம் பேர் பல வேறு துறைகளில் உழைத்து எழுதி எழுதித் தள்ளுவதன் விளைவாய் முடிவில் பேரிலக்கிய மொன்று உருவடைகிறது. இலக்கிய கர்த்தா தனது உள்ளொளியின் துணையால் அவ்விலக்கியத்தைச் சமைக்கிறான். ஆனால் அவனைச் சமூகமே தோற்றுவித்தது என்பதை மறந்துவிடக்கூடாது.

எனவே, எழுத்தாளர் பல்லாயிரர் இருக்கலாம். இவர்களுள் இலக்கியக் கர்த்தா ஒருவனே தோன்றுகிறான். எழுத்தாளர், காரிகை கற்றுக் கவி பாடுவதுபோல, பல கருவிகளைச் சேகரித்துக்கொண்டு முயன்று எழுதுகிறார்கள்; வேறு பயன் கருதி எழுதுகிறார்கள். இலக்கியக் கர்த்தாவோ, தன் உள்ளொளியால், தன் ஆனந்தத்தையோ வேதனையையோ அடக்க முடியாமல் வெளியிடுகிறான்; அவ்வெளியீடே இலக்கியமாகிறது. இவ்விதம் இருவகையான எழுத்துக்கும் அடிப்படையில் வேற்றுமை இருக்கிறது. ஒன்று முயன்று எழுதுவது; மற்றொன்று, முயற்சியின்றித் தானே உண்டாவது. இவ்விரண்டும் பாட்டு, கதை, முதலான எவ்வகையான எழுத்தாகவுமிருக்கலாம். பின்னது தான் இலக்கியம், முன்னது இலக்கியமன்று.

எழுதுவோர் இந்த வேற்றுமையை உணர்ந்திருந்திருத்தல் எவ்வளவோ நல்லது. எழுதுவதற்கு இன்றுள்ள காரணங்கள் பல. ஒவ்வொருவரும் தாம் எழுதியது இலக்கியம் என்று எண்ணிக்கொள்வது வீண் மயக்கமேயாகும். பாரதியார் தம்முள்ளத்தின் கொந்தளிப்பை எல்லாம் கவிதை மாரியாகப் பொழிந்தார் என்றால், எல்லோரும் கவிதை மாரி பொழிந்துவிட முடியாது. பாரதியார் பாடல் உயர்ந்த கவிதையாயிருக்க, ஏனையோர் பாடல் வெறும் செய்யுளாய் நின்றுவிடுகிறது. உயர்ந்த கவிதையானது, என்றும் பேரிலக்கியமாய் விளங்கி, சாந்தி தருகிறது, மக்களுள்ளத்தைக் களிப்பிக்கிறது. செய்யுளுக்கு இந்த ஆற்றலில்லை. வசனத்திலும், இது போலவே முயன்று எழுதும் கதை

முதலியன யாவும் இலக்கியமாகாமையால், பயனில்லாதன வாகின்றன. ஆசிரியனுடைய முயற்சியின்றி, தானே அவனிடமிருந்து வெளிப்படும் கதை முதலியன இலக்கிய மாகின்றன. இவற்றுக்கே பயனுண்டு, வாழ்வுண்டு.

பாரதியாரைப் போற்றுபவர்கள், சிறந்த கவிஞன் ஒரு மொழியில் உதிப்பது மிகவும் அருமை என்றே கூறுகிறார்கள். பாரதி காலம் வரையில் தமிழ் நாட்டில் உண்மையான இலக்கிய கர்த்தா அபூர்வமாய்த்தான் தோன்றினர் என்றால், அவர் காலத்துக்குப் பின்னும் அபூர்வம்தானே ? இதே கருத்துப்படி, இன்று நூறுபேர் எழுதுகிறார்களென்றால், இவர்களில் உண்மையான இலக்கிய கர்த்தா அபூர்வந்தான். எழுதுவோர் அனைவரும் இலக்கியகர்த்தாக்களல்லர். இலக்கியத்தின் பயன், படிப்போருக்கு இன்பமளிப்பது, வாழ்க்கையின் இன்ப துன்பங்களைக் காட்டி இன்னும் மேலான நெறிக்கு வழிகாட்டுவது, மக்கட் பண்பின் உண்மையை எடுத்துப் புலப்படுத்துவதன்மூலம், வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது, வாழ்க்கைக் கொந்தளிப்பில் மனத்துக்கு அமைதி தருவது. இன்று நம்மிடையே இலக்கிய கர்த்தாக்கள் மலிந்திருக்கிறார்கள் என்று சொல்லக்கூடுமானல், இவர்கள் எழுத்தின் பயனய், மக்கள் வாழ்வும், ஒழுக்கமும், லக்ஷ்யமும் எவ்வளவோ மேலாயிருக்கவேண்டும், எவ்வளவோ முன்னேற்றமடைந்திருக்க வேண்டும். ஆனல், பாரதியார் ஒருவருக்குப் பின், மக்கள் வாழ்க்கையையும், எண்ணங்களையும் எவ்விதமாகவும் பாதித்த இலக்கியம் எதுவும் தோன்றியதாகத் தெரியவில்லை. தோன்றியிருந்தால் அதன் பிரதிபலிப்பைச் சமூக வாழ்வில் உணர இயலுமல்லவா ? எனவே, இத்தகைய இலக்கியம் தோன்றாமையால், இலக்கிய கர்த்தாக்களும் இல்லை என்பது தெளிவு.

ஆயிரம் பேரில் ஒருவரே இலக்கிய கர்த்தாவாக இருக்கக்கூடுமாதலால், எழுதுவோர் இது பற்றிப் பெரிதும் அதைரியமடைய வேண்டுவதில்லை. இவர்களுடைய எழுத்

தாகிய சேவையும் உண்மையாகவே பயன்பட முடியும். நாமெல்லோரும் இலக்கிய மன்னர் என்ற மயக்கம் இவர்களுக்கு இல்லாதிருந்து, பயனுள்ள காரியம் செய்யலாம் என்ற துணிவு இவர்களுக்குப் பிறக்குமானல், இவர்களுடைய எழுத்து தமிழ்நாட்டுக்கு அளவற்ற பயனைத் தந்து எவ்வளவோ முன்னேற்றத்துக்கு இடமாயிருக்கும். சமீப காலத்தில் கதை எழுதுவோர் தொகை பெருகிவிட்டது; கதைப் புத்தகங்களும் பத்திரிகைகளும் அளவில்லாமல் பெருகிவிட்டன. இவை அதிகமாகவும் விற்பனையாகின்றன வென்று சொல்லுகிருர்கள். விற்பனையை வைத்துப் பயனை மதிப்பிட முடியாது. கதைகளே படிக்கும்படி மக்களைப் பழக்கி, கதைப் புத்தகங்களையே மக்கள் விரும்புகிருர்கள் என்று சொல்லி, அவற்றையே பெருக்கிக்கொண்டுபோவது சேவையாகாது. உலகம் போகிற போக்கில் தானும் போகிறவன் அறிவுடையவனுகான். சரியான வழியில் சிந்தித்துத் திட்டம் வகுத்துத் தன் திட்டப்படி உலகைச் செலுத்த வல்லவனே அறிவுடையவன். உலகத்தோடு ஒட்ட ஒழுகுதல் ஒருவனுக்கு வெற்றி தரக்கூடும். ஆனல் அது சேவையாகாது, பயனுடையதுமாகாது. தன் வழி உலகைத் திருப்ப வல்லவனே மக்கட் குலத்துக்குச் சேவை செய்பவன்; திருப்ப முடியாவிட்டாலும், திருப்ப முயலவாவது வேண்டும்.

ஆதலால், கதைகளையும் வீண் பொழுதுபோக்கையுமே மக்கள் விரும்புகிருர்கள் என்று கருதி இதற்காவன செய்வது இலக்கியமாகாது; இலக்கிய சேவையோ அன்றி நாட்டின் சேவையோ ஆகவும் ஆகாது. தமிழ்நாட்டில் பிறந்தவனுக்குப் பொழுதுபோக்க நேரமேது? பொழுது போக்குவது என்ருல் ஆணுயினும் பெண்ணுயினும் சோம்பேறித்தனமாய்க் காலங் கடத்துவதைத் தவிர வேறென்றுமில்லை. செய்கிற வேலையில் போதிய ஈடுபாடு இல்லாமையால்தான், சோர்வோ, பொழுதுபோக்க வேண்டும் என்ற

எண்ணமோ எழுகிறது. வேலையில் சோர்வு ஏற்படுங் காலத்து, பிடித்தமான மற்றொரு வேலை செய்யத்தக்க முறையில் வாழ்க்கையை மக்கள் அமைத்துக் கொள்வார்களானால், சோர்வு அல்லது பொழுதுபோக்கு என்ற பரம கருணநோக்கத்தோடு கதைப் புத்தகம் எழுதுவது, இன்றியமையாத ஒரு காரியமுமன்று, சேவையுமன்று.

இன்று எழுத்து வேலையில் ஈடுபட்டுள்ள நூற்றுக் கணக்கான எழுத்தாளர்களும் இவற்றைச் சற்று சிந்தித்துப் பொழுதுபோக்குவதற்காகக் கதை எழுதுவதை நிறுத்திக்கொள்வது நல்லது. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ்மொழியில் கொணர்தல் வேண்டும் என்ற பாரதியாரின் ஆசையை இவர்கள் நிறைவேற்ற முயல்வார்களானால், தமிழகத்துக்கு எவ்வளவோ பயனுண்டு; எல்லோரும் பெருங் கலைஞர்களாகாவிட்டாலும், பெரும் பயன் தரும் காரியம் செய்தோம் என்று களிப்படைய வழியுண்டு. நூற்றுக்கணக்கான எழுத்தாளர் நூறு வருஷம் முயன்று அவற்றைத் தமிழ் மொழியில் கொணர்ந்தலும், வேலை முடிந்துவிடாது. எனவே, கதை எழுதுவோர் இவ் வேலையை விட்டுவிட்டு, விஞ்ஞான நூல்களைப் படித்துணர்ந்து பாமர மக்கள் புரியும் வண்ணம் தமிழில் தெளிவாக எழுத முற்பட வேண்டும். ஆங்கில மொழியில் எந்த அறிவியற் கலை பற்றியும் எளிய அரிய நூல்கள் அளவிறந்தன உள்ளன. அவற்றைப் பயில்வதும் எளிது. ஆங்கிலம் அறியாத நம்மவரும் அறியும்படி அந்நூற் கருத்துக்களைத் தமிழில் வெளியிடுவது, எழுத்தாளர் இன்று செய்யக்கூடிய வேலையில் மிகவும் சிறந்ததாகும். வெறும் கதைகளை எழுதி ஏழைத் தமிழன் வீண்பொழுது போக்கும்படி செய்ய இவர்கள் முயல்வதைவிட, அறிவியல் நூல்கள் எழுதி, அவன் அறிவு வளர உதவுவார்களானல், தமிழகமே விரைவில் மாறிவிடும். அறிவியல்துறைகள் பற்றிய பொது அறிவு அனைவருக்கும் கிடைக்குமானல், அதுவே உண்மை

யான தமிழர் வாழ்க்கையின் மறுமலர்ச்சிக்கு வித்தாகும். மக்களனைவருடைய அறிவும் வளர்வதே உண்மையான மலர்ச்சி. அருள் வசத்தால் ஆற்றலோடு பிறந்து புத்திலக்கியம் சிருஷ்டிப்போர் சிருஷ்டிக்கட்டும். ஏனையோர் முயன்று கதை எழுதுவதைத் தொழிலாக வைத்திருப்பதை விட்டு, முயன்று அறிவு வளர்க்க வழி தேடுவார்களானல், இது எவ்வளவு மேலான சேவையாகும்!

இத்தகைய போக்கு தமிழுலகில் இனியேனும் வருமாக. புதுமைத் தமிழின் லக்ஷ்யம் பொழுதுபோக்கு என்ற அப்பிராயம் நீங்கி, அறிவு வளர்ச்சி என்ற அபிப்பிராயம் உதிக்குமாக.

## 11. தமிழ்ப் புத்தகங்கள்—1943

கலிங்க நாட்டின் மீது சோழனுடைய படைகள் படையெடுத்துச் சென்று, கலிங்கனேடு போரிட்டு அவன் படையை அழித்து வெற்றி கொண்ட சரித்திரத்தைக் கலிங்கத்துப்பரணி மிக்க அழகாய்க் கூறுகிறது. பயங்கரமான அந்தப் போரிலே, போர்க்களத்தின் நிலையைப் பலவிதமாக வருணித்த ஆசிரியர் கடைசியாக, "தேவாசுர ராமாயண மாபாரதம் உளவென்று ஓவா உரை ஒயும்படி உளது அப் பொருகளமே" என்று சொல்லி அதன் கொடுமையைப் புலப்படுத்த முடியாது என்ற மாதிரிக் குறிப்பிட்டு நிறுத்தி விடுகிறுர்.

காலம் மாறிவிட்டது; ஆனுல் போர்க்கொடுமை மாற வில்லை. அந்தப் போருக்குப்பின் ஏறக்குறைய எண்ணூற்று நாற்பது ஆண்டுகள் கழிந்துவிட்டன. ஆனுல் போரின் கொடுமையும் எண்ணூற்று நாற்பது மடங்கு பெருகியிருக் கிறதோ என்று எண்ணும்படி யிருக்கிறது. அன்றைய போர்க் கொடுமையைப் போர்க்களத்திலே மட்டும் பார்த் தோம். ஆனுல் இன்றோ,போரில் ஈடுபட்டுள்ள நாடுகளில் எங் கும் போரின் கொடுமையைப் பார்க்கிறோம். இயற்கையை வெற்றிகொண்ட மனிதன், அவ்வெற்றியைக் கொலை, கொள்ளை, கொடுமைக் கென்றே பயன்படுத்துகிறுன். பகை நாட்டுக்குள்ளே விமான மூலமாகப் புகுந்தவன் காலனைப் போல எல்லாவற்றையும் அழிக்கிறுன். நல்லோரென்னுன்; தீயோரென்னுன்; செல்வரென்னுன்; வறியரென்னுன்; பெண்டிரென்னுன்; பிள்ளைகளென்னுன்; ஒரே நாசவேலை. உயிருடையவை உயிரில்லாப் பொருள்கள் - யாவும் சர்வ நாசம்.

இந்த நாச வேலைக்கும் புத்தகங்களுக்கும் சம்பந்த முண்டா? உண்டு. நேர்முகமாகவும் உண்டு, மறைமுக

மாகவும் உண்டு. ஒன்றை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன். யுத்தம் தொடங்கியது முதல் 1942 செப்டம்பர் மாதம் வரையில் விமானப் படையெடுப்புக் காரணமாக இங்கிலாந்திலே இரண்டுகோடிப் புத்தகங்கள் அழிந்தனவாம். குறிப்பாக இங்கிலாந்தில் விமானப்படை யெடுப்பு மிகவும் கொடுமையாக நடைபெற்ற காலமாகிய 1940 டிசம்பர் மாதத்திலே, ஒரே ஒரு இரவில் மட்டும், ஒரு கோடிக்கு மேற்பட்ட புத்தகங்கள் அழிந்தனவாம்! (ஒரு கோடிப் புத்தகமென்றால் நமக்கு விளங்குமா?)

நல்ல காலமாக நம்முடைய நாட்டிலே இந்த நிலைமை ஏற்படவில்லை. இத்தகைய கொடுமையை நாம் காணவில்லை. கடல் மட்டுந்தான் பொங்கிவந்து புகார் நகரத்தையும் தென் மதுரை நகரையும் கபாடபுரத்தையும் உண்டு, அங்கிருந்த புத்தகசாலைகளையும் அழித்துவிட்டது என்று பண்டைய உரையாசிரியர்கள் சொல்வதை நம்பியிருக்கிறோம்.

மேலே கூறியது நேர்முகமான நாசவேலை. போருக்கும் புத்தகத்துக்கும் மறைமுகமாகவும் எவ்வளவோ சம்பந்தமிருக்கிறது. காகிதத் தொழிற்சாலைகள் எத்தனை எரிந்து போகின்றன! எத்தனை நாடுகள் பகைவன் வசமாகி விட்டபடியால் காகிதம் கிடைப்பது நின்று போயிற்று? எத்தனைக் காகிதக் கப்பல்கள் நடுச்சமுத்திரத்தில் நீர் மூழ்கியால் தாக்கப்பட்டுக் கடல் வயிற்றினுள்ளே அடங்கி விட்டன? எத்தனை முறை காகிதமேற்றி வருவதற்கான கப்பல்கள் யுத்த தளவாடங்களை ஏற்றிச் செல்ல வேண்டி யிருந்தமை காரணமாக, காகிதமே வராமற் போயிற்று? அச்சு யந்திரங்களும் அவற்றுக்கான பாகங்களும் வராமற்போயின? ஏதோ இரண்டெழுத்து எழுதத் தெரிந்தவர்கள், சொற்ப ஊதியமே கிடைக்கிற எழுத்துத் தொழிலை விட்டுவிட்டு, மிக்க ஊதியம் கிடைக்கிற யுத்த இலாகா வேலையை நாடிச் சென்றவர்கள் எத்தனை பேர்? அச்சுக் கோப்பதிலும் புத்தகம் கட்டுவதிலும் திறமை

பெற்றிருந்த தொழிலாளர் எத்தனை பேர் போருக்குப் போய்விட்டார்கள் ? அல்லது போருக்குத் துணையான வேறு தொழில்களை மேற்கொண்டுவிட்டார்கள் ? இப்படியாக ஏற்பட்டுள்ள அளவற்ற காரணங்களால் புத்தகம் உற்பத்தி செய்யும் தொழில் பாதிக்கப்படவில்லை என்று கூற முடியுமா ?

புத்தகத் தொழில் பாதிக்கப்பட்டிருப்பது உண்மை தான். ஆனாலும் ஒரு புறம் அது வளர்ந்தோங்கி வந்திருக்கிறது என்பதையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம். மின்னல் வேகம் என்பார்களே, அந்த வேகத்தில் நாள் தோறும் அளவற்ற புத்தகங்கள் வெளிவந்த வண்ணமாகவே இருக்கின்றன. இதன் காரணமென்ன ?

பணப்பெருக்கம், பணவீக்கம் என்கிறார்கள். பணப் புழக்கம் அதிகமாயிருக்கிறது என்கிறார்கள். (பொருளாதார சாத்திரம் கற்ற அறிஞர்கள் விளக்கிச் சொல்லவேண்டிய விஷயம் இது.) யுத்தத்தின் விளைவாக, அரசாங்கத்தார் ஏராளமாகக் காகித நோட்டுக்களை அச்சிட்டு வினியோகம் செய்திருப்பது காரணமாக 'பணம்' தாராளமாய்ப் புழங்குகிறது. (இப்படி அதிகமாய்ப் புழங்கும் பணத்தைக் கொண்டு ஏழைகள் முன்போல் சௌக்கியமாக வயிறு வளர்க்க முடியவில்லையே என்றால், அது வேறு விஷயம்.) ஆகவே, தாராளமாய்ப் புழங்கும் பணமானது பல பொருள்களின் மீது வாரி இறைக்கப்படுவது போலவே புத்தகங்களின்மீதும் இறைக்கப்படுகிறது. எல்லா நாடுகளிலும் புத்தகங்கள் ஏராளமாக உற்பத்தியாயின. தமிழ்நாடும் இந்த விதிக்கு விலக்கல்ல ; இங்கும் புத்தகங்கள் ஏராளமாய் உற்பத்தியாயின. (எழுதப்பெற்றன என்று சொல்லவில்லை; உற்பத்தியாயின என்றே சொல்லுகிறேன்.)

நம் நாட்டிலே, புத்தகம் வெளியிடுவோர் நிலைமை எவ்வளவோ கஷ்டமானது. புத்தகம் எழுதுவதற்கான ஆசிரியர்களையும் புத்தகத்தில் அமைவதற்கேற்ற விஷயத்தை

யும் பிறகு கவனிக்கலாம். அச்சிடுவதற்கான காகிதம், அட்டை, காலிகோத்துணி, மை ஆகிய யாவும் ஒன்றுக்குப் பத்தாக விலை ஏறிவிட்டன. ஒரு சிறு உதாரணம்: அச்சிடும் கிளேஸ் (வழுவழுப்பான) காகிதம் ஒரு பவுண்ட் எடை மூன்றணு, மூன்றரை அணுவாக 1939 தொடக்கத்தில் விற்றது. அந்தக் காகிதம் 1943 தொடக்கத்தில் கடைகளிலே கிடைப்பதில்லை. திருட்டுத்தனமாகச் சிலரிடம் கிடைக்கும். விலையோ - என்ன இருக்குமென்று நினைக்கிறீர்கள்? ஒரு ரூபா பதினுன்கணு அல்லது இரண்டு ரூபா! (விறகுக்கும் அரிசிக்கும் பறக்கின்ற இந்தக் காலத்திலே இதை யாரும் நம்ப முடியாது என்று சொல்ல மாட்டார்கள்.) இந்த நிலைமையில் புத்தகம் வெளியிடுவோர் என்னதான் செய்வார்கள், பாவம்! ஆனல் மற்ருெருபுறம், புத்தகம் வெளியிடுவோர் தொகையோ பல மடங்கு பெருகியிருக்கிறது. புத்தகக் கம்பெனி ஒன்று இருந்த இடத்திலே இன்று நான்கு இருக்கிறது. (லாபத்துக்காகத்தானே புத்தகம் போடுகிருர்கள் என்று கேட்கலாம்; அது விஷயமல்ல.) காலம் தலைகீழாக மாறியிருக்கும் இந்தச் சமயத்தில், மிக்க துணிச்சலுடன் புத்தகம் வெளியிடும் தொழிலில் ஈடுபட்டுள்ள பிரசுராலயத்தார், பதிப்பகத்தார், நிலயத்தார், கம்பெனியார் அனைவருக்கும் நாம் முதலாவதாக நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிருேம்.

இனி இக்காலத்து வெளியாகும் புத்தகங்களின் புறத் தோற்றத்தைச் சிறிது பார்க்கலாம். இன்றைய புத்தகங்களின் தோற்றத்தைப் பார்க்கு முன்னே, ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னே வெளிவந்த தமிழ்ப் புத்தகங்கள் எப்படி இருந்தன என்பதை இங்கே நினைவு கூர்வது மிக்க உதவியாய் இருக்கும். ஆனல் இன்றுள்ள புத்தக ஆசிரியர்கள் அல்லது வெளியீட்டாளர்களில் யாரும் நூறு ஆண்டுகளுக்கு முன் வெளியான தமிழ்ப் புத்தகத்தைப் பார்த்திருப்பார்களா என்பது சந்தேகம். ஆகவே, நூறு ஆண்டென்பது

வேண்டாம். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வந்த புத்தகங்களின் தோற்றத்தை விசாரித்தாவது தெரிந்துகொள்வோம்.

அப்படிப்பட்ட ஒரு புத்தகத்தை ஓர் அறிஞர் வருணிக்கிறார். கொஞ்சம் கேட்போம்: "தமிழ்ப் புத்தகத்தை அட்டையை பார்த்தவுடனேயே இனம் கண்டுபிடித்து விடவேண்டுமென்று அதற்குத் தனிமையான மார்பிள் பேப்பர். தூசியைத் துடைத்தால் திரைந்து அப்படியே கையோடு கையாய் வந்துவிடும். முதுகுக்கும், முக்குக்கும் காலிகோ; வைதிகமான காலிகோ. அதாவது காவி ஏற்றிய காலிகோ; சாதாரணக் காவித் துணிதான்; உபசாரமாக காலிகோ என்று சொல்லுகிறது. அட்டையைத் திறந்து உள்ளே பார்த்தால், அது ஒரு தனியான கடுதாசி. டாக்காமஸ்லின் எல்லாம் தோற்றுப்போய்விடும், அவ்வளவு மென்மை, அவ்வளவு மிருது. முதல் பக்கத்தைத் திருப்பினேன்: அப்படியே மத்தியில் கிழிந்துவிட்டது. எல்லாவற்றையும் விட விசித்திரம், அச்சுவாகனம் ஏறிய அழகுதான். ஏதோ ஒரு ஏட்டை அச்சுக் கோக்கும் பையன் கையில் கொடுத்துவிட்டு, 'உன் இஷ்டம்போல் அச்சைக் கோத்து வை' என்று சொல்லிவிட்டார் "பதிப்பாசிரியர்." அகராதி, இலக்கணம், யாப்பியல் எல்லாவற்றையும் அதம் பண்ணினன் பையன். எப்படியோ, தவிட்டு நிறமாய் இருந்த கடுதாசியில் கறுப்பு அடைசி, நூலாகவே ஆய் விட்டது! ஒரு செய்யுளையாவது உருவாகக் காண முடிய வில்லை. ஏன், ஒரு அடியைக்கூடக் காண்பது கஷ்டமாய் இருந்தது. நூலை வாசிக்கிறதைவிட, நூறு குறுக்கெழுத்துப் போட்டியைத் தீர்த்துவிடலாம்."

இந்த நிலை, ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வந்த புத்தகங்கள் சம்பந்தப்பட்டவரையில் முற்றும் உண்மை. தனிப்பட்ட சில அறிஞர்கள் - ஆறுமுக நாவலர், தாமோதரம் பிள்ளை, சாமிநாதையர் போன்றோர் - பதிப்பித்த புத்தகங்கள், பிழை

யின்றி அழகோடு இருந்தன ; ஆனல் புத்தக வெளியீட்டுக் கம்பெனிக்காரர்கள் பேரால் வெளியான புத்தகங்கள் எல்லாம் முன்சொன்ன நிலையில்தான் நெடுகிலும் இருந்து வந்திருக்கின்றன.

1943 ஆம் ஆண்டுக்கு வரும்போது ஒரு புது மாறுதலைப் பார்க்கிறோம். புத்தகத்தை அழகுபடுத்த வேண்டுமென்ற ஆசை எல்லோருக்கும் இருந்து வருவது புலனுகிறது. அழகுபடுத்துவதில் எத்தனையோ வகை. ஆங்காங்கே பொருத்தமான இடங்களில் சித்திரங்களையும், படங்களையும் அமைப்பது ஒன்று. சென்ற பல ஆண்டுகளாகச் சிலர், நூலினுள் எவ்வளவு பிழைகள் மலிந்திருந்த போதிலும், அவற்றை நீக்குவதிலே கருத்தைச் செலுத்தாமல் புத்தகத்தின் கட்டிடத்தைப் பல்வேறு விதமாக அழகுபடுத்திப் பொன்னெழுத்தெல்லாம் பொறித்து வெளியிட்டு வருவது மேற்சொன்ன வகைகளுள் மற்ெருரு வகை. நல்ல காகிதத்தை உபயோகிக்கவேண்டும், பெரிய எழுத்திலே அச்சிட வேண்டும் என்று யாரும் எண்ணியதாகத் தெரியவில்லை. ஆனல், இந்த ஆண்டிலே புத்தக வெளியீட்டாளர் அனைவரும் கையாளும் புதுவகை, புத்தகத்தின் அட்டையைக் கவர்ச்சியுடையதாக்கும் முறை. புத்தகம் சிறியதாயிருந்தாலும் பெரியதாயிருந்தாலும், ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய பொருள் கொண்டதாய் இருந்தாலும் சரி, அல்லது லேசாகப் புரட்டிப் பார்த்துவிட்டுத் தூக்கி எறியத் தக்கதாய் இருந்தாலும் சரி, அதற்கு ‘கெட்அப்’ கொடுக்க வேண்டியது அவசியமென்று எல்லோரும் கருதுகிருர்கள். அதாவது என்ன ? கடையிலே புத்தகம் வைத்திருக்கிறது. கடைக்கு வருபவரோ, தூரத்தில் நின்றபடியே புத்தகக் கடைப்பக்கம் பார்வையைச் செலுத்துகிருர். உடனே புத்தகமானது அவர் மனத்தைக் கவர்ந்து, தன்னை அவர் பணம் கொடுத்து வாங்கும்படி செய்யவேண்டும். இதுவே

வெளியீட்டாளர்கள் புத்தகத்துக்கு ‘கெட்அப்’ கொடுப்ப தன் கருத்து.

ஆனால் இது முடியுமா? முடியும். பணப்பெருக்கம் என்று மேலே பார்த்தோமல்லவா, அதை இங்கே ஞாபகப் படுத்திக் கொள்ளவேண்டும். நகர்ப்புறங்களிலே பணம் தண்ணீர் மாதிரிப் புழங்குகிறது. காப்பிக் கடைக்குப் போனால் ஒரு ரூபாய் தொலைகிறது. நண்பரைப் பார்க்க வீட்டைவிட்டு மற்றோரிடம் சென்றால், பஸ்ஸுக்கென்றும் டிராமுக்கென்றும் கையைவிட்டு ஒரு ரூபாய் கழல்கிறது. சினிமாவுக்குப் போனால் சொல்லவேண்டுமா? இந்த நிலையிலே, பார்க்கக் கவர்ச்சியான ஒரு புத்தகம் கண்ணில் பட்டால், அதற்கு ஒரு ரூபாயோ ஐந்து ரூபாயோ கொடுத்து வாங்குவது யாருக்கும் அதிகமாய்த் தோன்றாது.

புத்தகங்கள் தமிழில் ஏராளமாய் வெளிவருவதையும் அவை அழகான தோற்றம் பெற்றிருப்பதையும் குறித்து ராஜாஜி ஒரு சமயம் கூறியதை இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். “ஆந்திரநாட்டுத் தலைவர்...(இன்னார்), தமிழில் வெளியாகும் புத்தகங்களைப் பார்க்கும்போதெல்லாம், ‘எங்கள் மொழியில் இவ்வளவு புத்தகங்கள் இவ்வளவு அழகாக வெளிவரவில்லையே’ என்று பொறுமை கொள்ளுகிறார்” என்றார். நாம் பெருமை கொள்ள வேண்டிய செய்தியல்லவா இது?

இப்படி வெளியாகும் புத்தகங்களிலே உண்மையாகவே மிக்க கவர்ச்சியுடைய புத்தகங்களும் இருக்கின்றன. அக் கவர்ச்சி காரணமாகப் புத்தகத்தை வாங்கவும், படிக்கவும் ஆசையாக இருக்கிறது. கைக்கோ அலங்காரம் என்று சொல்லும்படிக்கூட இருக்கிறது. உதாரணமாக ஒன்றைமட்டும் சொல்லுகிறேன். வெ. சாமிநாத சர்மா அவர்கள் எழுதிய சோவியத் ருஷ்யா என்ற அரிய புத்தகத்தைச் சக்தி காரியாலயத்தார் வெளியிட்டிருக்கிறார்கள். முந்நூறு பக்கம் கொண்ட பெரிய புத்தகம். ருஷ்யா

நாட்டு வாழ்க்கையைக் காட்டும் புகைப் படங்கள் எட்டுப் பக்கம் ஆர்ட் காகிதத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

ஆனால் இவற்றை நாம் இப்போது பார்க்கவேண்டாம். புத்தகத்தின் வெளித்தோற்றம் எப்படி? உறுதியான கதர்த்துணிக் கட்டிடம்; செக்கச் செவேரென்று இரத்த நிறமான துணி. இதற்கு மேலே உறுதியான காகித அட்டை - அந்த அட்டையும் முன் பக்கம் முழுதும் கண்ணைப் பறிக்கின்ற சிவப்பு நிறம். அட்டையின் மேலும் துணிக் கட்டிடத்தின் மேலும் ருஷ்ய நாட்டுக் கொடியின் அடையாளமான சம்மட்டியும் அரிவாளும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. செந்நிறத்தையும் இந்த அடையாளங்களையும் பார்க்கும்போது, ருஷ்யநாட்டுச் செந்நிறக்கொடி (நாம் நேரே பார்த்திராவிட்டாலும்கூட) நம் கண் முன்னே நிற்கிறது. அந்தக் கொடி எந்த லட்சியங்களுக்கு அடையாளமாய் இருக்கிறதோ, அந்த லட்சியங்களை இப்புத்தகத்தின் வெளித் தோற்றம் மட்டுமே நமக்கு நினைப்பூட்டி நம்மைச் சிந்திக்கச் செய்கிறது. இதில் மிகை ஒன்றும் இல்லை. ருஷ்ய நாட்டு அரசியல் அறிஞர்கள் அல்லது புத்தக வெளியீட்டாளர்கள் இப்புத்தகத்தைப் பார்ப்பார்களேயானால், உண்மையிலேயே அவர்கள் தமிழ்நூல் வெளியீட்டைப் பற்றிப் பெருமிதமான எண்ணம் கொள்வார்கள். நூல் வெளியீட்டில் தமிழன் யாருக்கும் சளைக்கமாட்டான் என்பதை இப்புத்தகம் ஒன்றே நிரூபித்துவிடும்.

புத்தகத்தின் வெளித்தோற்றத்தின் தகுதிக் கேற்ப அதனுள் அடங்கிய பொருளும் மிகச் சிறப்பாக அமைந்திருப்பது இவ்வொரு புத்தகத்தின் தனிப் பெருமை.

இனி வெளித் தோற்றத்துக்கு அடுத்தபடியாகப் புத்தகங்களின் உட்பொருள் பொதுவாக எப்படி அமைந்திருக்கிறது என்பதையும் ஒருவாறு பார்க்கலாம்.

ஏறக்குறையப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னே சென்னையிலிருந்த பல அறிஞர்களின் துணைகொண்டு

மயிலாப்பூரில் கலைமகள் என்று ஒரு மாதப் பத்திரிகை தொடங்கப்பட்டது. டாக்டர் - உ. வே. சாமிநாதையர், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார், கே. சுவாமிநாதன் இன்னும் பல அறிஞர்கள் அப்பத்திரிகையின் இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள். கலை, இலக்கியம், விஞ்ஞானம் போன்ற துறைகளிலே தமிழை முன்னேறச் செய்து, தமிழுக்குப் புத்துணர்ச்சி யூட்டுவது அவர்கள் நோக்கம். நாட்கள் செல்ல, இப்பத்திரிகாலயத்தார் புத்தகம் வெளியிடுவதிலும் ஈடுபட்டார்கள் 1943இல் இவர்கள் வெளியிட்ட புத்தகங்கள் எப்படிப்பட்டவை என்று ஆராய்ந்தால், தமிழ் நாட்டில் புத்தகத் தொழில் எந்தத் துறையிலே போய்க் கொண்டிருக்கிறது என்பதை உணர்வதற்கு, அது சரியான வழிகாட்டியாகுமல்லவா ?

இவர்கள் இவ்வாண்டு வெளியிட்ட புத்தகங்கள் பன்னிரண்டு. அவற்றுள் நாவல்கள் ஆறு ; கதைத் தொகுதிகள் நாலு ; நாடகங்கள் இரண்டு. இவற்றிலே மொழி பெயர்ப்பாயுள்ளவை ஆறு, சொந்தமாய் எழுதப்பெற்றவை ஆறு. இந்தப் பட்டியலைப் பார்க்கும்போது நமக்குப் பெருத்த ஏமாற்றம் ஏற்படுகிறது ; கலைக்கும் விஞ்ஞானத்துக்கும் தொண்டு புரிவார்கள் என்று நாம் எண்ணிய காரியாலயத்தார் வெறும் கதைகளையும் மொழிபெயர்ப்புக்களையும் வெளியிட்டுக்கொண் டிருக்கிறார்கள் !

இதன் காரணம் என்ன ? பொதுவாக மக்களுக்கு எத்தகைய புத்தகங்களிலே மனம் செல்லுகிறதோ, அத்தகைய புத்தகத்தை வெளியிடுவதே தொழில் முறையில் லாபகரமான வேலை. ஆகவே, கதைப் புத்தகங்களே இன்றைய மக்கள் மிகுதியாக வாங்குகிறார்கள் படிக்கிறார்கள் என்றால், கதைப் புத்தகங்களை வெளியிட்டதற்காக இவர்களை நாம் குறைகூற முடியுமா ?

மக்கள் ஏன் கதைப் புத்தகங்களை மட்டுமே தேடுகிறார்கள் ? இது வாழ்க்கைப் போராட்டம் மிகுந்துவிட்ட காலம்.

சாதாரண நிலையிலுள்ள மக்கள் தங்களுடைய அன்றாட வேலையைக் கவனிக்கவே நேரம் போதவில்லை. ஓய்வென்பதே கிடையாது. ஆடவரானாலும், பெண்களானாலும், பொழுது போக்குவதற்கு நேரம் கிடைப்பது அரிது. அப்படிக் கிடைக்கிற நேரத்தையும் மிக்க எளிதாகவே, மனத்துக்குச் சிந்தனை செய்யும் வேலை சிறிதுமே இல்லாமல் கழித்துவிட விரும்புகிறார்கள். பொழுது போக்குவதற்கு உதவியான கருவிகள் எத்தனையோ. சினிமா ஒரு கருவி. நல்ல விஷயத்தை நல்ல முறையிலே உணர்ச்சி ததும்புமாறு படம் பிடித்துக்காட்டுகிறார்களா என்பது பற்றிக் கவலையில்லை. எதுவாயிருந்தாலும் இரண்டு மூன்று மணி நேரம் பொழுது போக்குவதற்கு ஏதேனும் இருந்தால் போதுமென்ற நினைவே மக்களுக்கு இன்று இருக்கிறது. சரி ரேடியோவா? இதே கதைதான். ரேடியோவிலே பாட்டு வேண்டுமா? கர்நாடக ராகமா, ஹிந்துஸ்தானியா அல்லது இங்கிலீஷ் நோட்டு அல்லது அராகமா - எதுவானாலும் சரிதான். ஏதோ கொஞ்சநேரம் 'கராமுரா' என்று கத்திக்கொண்டிருந்தால் போதும். அதைக் கேட்டுக்கொண்டு நம் சொந்தக் கவலைகளையெல்லாம் சற்று நேரம் மறந்திருக்கலாம் என்று நினைப்பவர்களே இன்று நம்மவர்களில் பெரும் பகுதியினர். சினிமாவிலோ ரேடியோவிலோ பார்ப்பவையும் கேட்பவையும் கலைப்பண்பு பொருந்தியிருக்கவேண்டும், உண்மையை விளக்கவேண்டும், உள்ளத்தை உருக்குவனவா யிருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்போர் அரியர்.

சினிமாவையும் ரேடியோவையும் போலவே, புத்தகத்தையும் ஒரு பொழுதுபோக்குக் கருவியாகவே அனேகர் இன்று எண்ணிவிட்டார்கள். புத்தகம், உண்மையை உணர்த்தவேண்டும், அதன் பொருளில் அழகு பொருந்தியிருக்கவேண்டும், நெஞ்சை யள்ள வேண்டும் என்ற எண்ணங்களெல்லாம் பறந்துவிட்டன. 'புத்தகத்தில் எதை

வேண்டுமானாலும் எழுதலாம். யார் வேண்டுமானாலும் எழுதலாம், விஷயமோ மொழியறிவோ உண்மை அனுபவமோ - வேண்டாம்' என்பன போன்ற எண்ணங்கள் பெருகிவிட்டன. காரணம், படிப்போர் சிந்திக்க வேண்டி யிருக்கலாகாது என்பதுதான் வேலை செய்து அலுத்துவந்தவன், பொழுது போக்க எண்ணினால், அவனுடைய அறிவுக்கும் உள்ளத்துக்கும் வேலை தரக்கூடிய விஷயத்தைத் தரலாமா? அறிவுக்குப் பொருத்தமில்லாதபடி ஏதோ 'காமா சோமா' என்று இரண்டுவரி கிறுக்கித் தள்ளிவிட்டால், அவன் அதைப் படித்து அப்பால் தூர எறிந்துவிட்டுப் போகட்டுமே! அவனுக்கும் தலைவலி வேண்டாம் நமக்கும் தலைவலி வேண்டாம் என்ற இந்தத் தயாள சிந்தைதான் நம் ஆசிரியர்களையும் வெளியீட்டாளரையும் இப்படிக் கதைப் புத்தகங்களையே வெளியிடத் தூண்டுகிறது.

ஆனால், கதை அல்லது நாவல் என்றால் அது இலக்கியமாகாதா, அறிவுக்கும் உள்ளத்துக்கும் வேலையையும் பக்குவத்தையும் அது தராதா என்ற கேள்விகள் எழலாம். அவைகளும் இலக்கியமாகும்; கலைப்பண்பு அமையப்பெறும்; உள்ளத்தை உருக்குவனவாயிருக்கும்; மக்களையுமே நல்வழிப்படுத்தலும் கூடும்; எப்போது? எழுதுவோரிடத்து இவற்றுக்கான தகுதி அமைந்திருக்க வேண்டும். வாழ்க்கையிலே நிறைந்த அனுபவம், பரந்த அறிவு - நூலறிவுங் கூட, நல்ல இதயம், சீலமான வாழ்க்கை, சிறந்த கற்பனைத்திறம் - இவையாவும் பொருந்தியிருந்து ஒருவன் நூல் இயற்றத் தொடங்குவானானால், அந்நூலிலே அறிவதற்குப் பொருளிருக்கும், உணர்வதற்கு உண்மையிருக்கும், வாழ்க்கையைச் செம்மைப்படுத்தவும் நாட்டின் நலனை நாடவும், ஆராய்ந்து சிந்திக்க வேண்டிய கருத்துக்கள் அதன்கண் பொருந்தியிருக்கும். அந்நூல் கதையாயுமிருக்கலாம், கட்டுரை, கவிதையாயுமிருக்கலாம், நாவல், நாடகமாயும் இருக்கலாம்.

ஆனல் இன்றுள்ள நிலைமை என்ன ? தமிழ்தெரிய வேண்டாம், தமிழ் பேசுகிற ஒரே பாவம் போதும். இரண்டெழுத்து ஆங்கிலம் தெரிந்துவிட்டால், ஆங்கிலத்தில் வரும் செய்திகளைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொடுத்துக் கொண்டிருக்கலாம். அல்லது பத்திரிகையில் காலியாயிருக்கிற இடத்தில் ஏதாவது இரண்டு (குப்பையோ நல்லதோ) மொழிபெயர்த்துப் போட்டு இடத்தை நிரப்பலாம். கொஞ்ச நாள் இப்படிச் செய்துவந்தால் ஆசிரியராகும் தகுதி உண்டாகிவிடுகிறது. எந்தக் கதையும் எழுதலாம். எந்தக் கதையும் மொழிபெயர்க்கலாம், என்ற நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. எல்லோரும் ஆசிரியர். (நோபல் பரிசுக்குக்கூட விண்ணப்பம் அனுப்பலாம்) இதையெல்லாம் எண்ணித்தான் போலும், ஹிந்துப் பத்திரிகையின் மதிப்புரையாளர் ஒருவர், நல்ல தமிழ் நாவலொன்றின் இரண்டாம் பதிப்பைப் பற்றி 1943 இல் எழுதியபோது, அதைப் பாராட்டிவிட்டு, தமிழ்ப்புத்தக உலகின் சீர்கேடான நிலைமையையும் சுட்டிக் காட்டினர் ; "மூன்ருந்தரமான ஆசிரியர்கள் எழுதிய கதைகளின் இரண்டாந்தரமான மொழிபெயர்ப்புக்கள் நம் புத்தகக் கடைகளில் வெள்ளமாகப் பெருக்கெடுத்து வந்து குவிவதைப் பார்த்தால், கற்பனைத்திறன்கொண்டு புதிதாகக் கலையைப் படைக்கும் ஆற்றல் முழுவதுமே அவ்வெள்ளத்தில் அழுந்திப்போய் விட்டதோ என்று சொல்லத் தோன்றுகிறது" என்று அவர் எழுதினர். எவ்வளவு உண்மையான வார்த்தை !

இலக்கியம் என்பது ஒரு பயிர்போல. பழமையிலிருந்து அது முளைத்து வளர்ந்து பலன்தரவேண்டும். முந்திய பயிர்களின் மடித்துப்போன தாளும் செத்தையுமே பயிருக்கு ஊட்டந் தரும் ; செயற்கை எரு எவ்வளவுதான் சேர்த்த போதிலும், முழுப்பலனும் கிடைக்காது. தெரியாமலா பசுந்தழை உரம் வேண்டுமென்று சொல்கிருர்கள்? இலக்கியமும் இப்படித்தான். பண்டைய மரபிலே கால்கொண்டு ஊன்றி

கின்றால்தான், புதுவளர்ச்சி சாத்தியமாயிருக்கும்; அது அழகாயும் உண்மையானதாயும் மக்களோடும் நாட்டோடும் ஒட்டியதாயும் இருக்கும். புட்டிப் பாலிலேயே குழந்தையை வளர்த்துவிடமுடியுமா? அதேபோல ஆங்கில மொழியறிவோ பிறமொழியறிவோ இருந்தால்மட்டும் தமிழை வளர்த்துவிட முடியாது.

இவை ஒருபுறமிருக்க, மொழிபெயர்ப்புக் கதைகளில் நல்லவைகளே இல்லையென்று சொல்லிவிடமுடியாது. உதாரணமாக, பேரறிஞரும் பெருங் கவிஞருமான ரவீந்திரநாத் தாகுர் நம் நாட்டிலே வங்காளத்தில் தோன்றினர். அவருடைய நூல்கள் பெரும்பான்மை வங்கமொழியாலும் சிறுபான்மை ஆங்கில மொழியிலும் எழுதப்பட்டவை. அவையனைத்தும் தமிழிலே வந்து தமிழை வளப்படுத்துவது அவசியம். அவற்றை மொழிபெயர்க்காமல் என்ன செய்வது? இந்தத் துறையிலே கலைமகள் காரியாலயத்தார் நல்ல தொண்டு செய்துவருகிறார்கள். இந்த ஆண்டிலும் தாகுர் நூல் ஒன்றை அவர்கள் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். இதற்காக அவர்களை நாம் பாராட்டத்தான் வேண்டும்.

இனி, அவர்களுடைய கதைப் புத்தகங்களிலே கி. சந்திரசேகரன் அவர்கள் எழுதிய பச்சைக்கிளி என்பது ஒரு தொகுதி. பெயரைப் பார்க்கும்போதே மனத்தில் மகிழ்ச்சி உண்டாகிறது. சிதைந்த காதல், உலர்ந்த புஷ்பம், விஷவிருட்சம் என்ற வறண்ட பெயர்களைப் போலல்லாமல், பச்சைக்கிளி என்ற இனிமையான பெயரே நம்மோடு கொஞ்சிக் குலவுகிறது. களங்கமற்ற உள்ளம்தான் பச்சைக்கிளியினிடத்து ஈடுபடமுடியும். புக்தகத்தின் முதலிலிருந்து கடைசிவரையில் எல்லாக் கதைகளிலும் - பச்சைக்கிளியிலே மனத்தைப் பறிகொடுத்த சிறு பையன், அகப்பைக் கூட்டை மறவாமல் மூட்டை கட்டிக்கொண்டுபோன அம்மாமி, அசமந்தமாகவேயிருந்து தம் உயிருக்குயிரான

இராமாயணத்தை மறந்துவிட்ட சாஸ்திரிகள் ஆகிய பல விதமான பாத்திரங்களை ஆசிரியர் வர்ணிக்கும்போது - ஒரேவிதமான மென்மை பொருந்திய இதயத்தைப் பார்க்கிறோம். வாழ்க்கையிலுள்ள இன்ப துன்பங்களில் அந்த உள்ளம் ஒரேவிதமாக ஈடுபடுகிறது. ஈடுபட்டுப் பலபேரின் உள்ளத்தில் அமைந்த ஏக்கத்தையும் அனுபவத்தையும் ஆராய்கிறது. எந்த அனுபவத்திலும் பலவேறு சாயல்கள் உள்ளன என்பதைச் சிந்திக்கிறோம். நமது உள்ளம் விரிகிறது.

இப்படிப்பட்ட கதைப் புத்தகங்கள் எத்தனை வெளியிட்டாலும் நாம் வரவேற்கத் தயாராக இருக்கிறோம்.

அடுத்தபடியாக, நாவல் என்று எடுத்துக் கொள்ளும்போது, சிறப்பாகச் சொல்லவிருப்பது, ரா. கிருஷ்ணமூர்த்தியவர்கள் எழுதிய பார்த்திபன் கனவு என்ற நாவல். ஏழாம் நூற்றாண்டிலே மகேந்திரவர்ம பல்லவன் இறந்தபின் பட்டத்துக்குவந்த நரசிம்மவர்ம பல்லவ மன்னன் காலத்திலே நரபலியிடும் வழக்கத்தை மேற்கொண்ட கொடிய காபாலிகச் சமயத்தை அவன் வேர் அறுக்கக் கங்கணம் கட்டிக்கொண்டான் என்ற சரித்திர உண்மையை அடிப்படையாக வைத்து கற்பனைச் சோழ இளவரசன் ஒருவன் சரித்திரத்தை ஆசிரியர் அழகாக புனைந்து கூறுகிறார்.

இக்கதை காதற்கதை என்பதை சொல்ல வேண்டியதில்லை. புத்தகத்தின் தமிழ் நடையானது முதலிலிருந்து முடிவுவரை இனிமையாக, சோர்வின்றி படிக்கக் கூடியதாயிருக்கிறது. கதை படிக்கிறோம் என்ற நினைவுகூட இல்லாமல் அந்தந்த நிகழ்ச்சிகளில் நாமே ஈடுபட்டிருப்பதாகவே நினைக்கும்படி செய்கிறது. இயற்கையின் வருணனையும் சந்தர்ப்பங்களின் அமைப்பும் கதைப்போக்கும் நெஞ்சை அள்ளுவன. இளவரசனை விக்கிரமனும் பல்லவ அரசகுமாரியான குந்தவியுமே ஆசிரியர் எண்ணிய கதாநாயக

னும் கதாநாயகியுமென்றால் நாம் இதை ஒப்புக்கொள்ள மாட்டோம். படகோட்டும் போக்கிரிப்பயல் பொன்னனும் கம்புமாவினல் அடைசுட்டுக் கொடுக்கும் வள்ளியுமே படிப்போருக்கு உண்மைக் கதாநாயகனும் கதாநாயகியுமாயிருக்கிறார்கள். இன்னுமொரு குறிப்பு. ஒரே விஷயத்தைப் பத்திரிகையில் வெளியிடுவதற்கும் புத்தகமாய் வெளியிடுவதற்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது. பத்திரிகைக்குப் பொருந்தாத விஷயம் அல்லது விவரங்கள் புத்தகத்துக்குப் பொருந்தும். அப்படியே பத்திரிகைக்கு ஏற்கக்கூடியவை புத்தகத்துக்கு ஏற்காமற்போகலாம். பார்த்திபன் கனவு பத்திரிகையில் முதலில் வெளிவந்தது. அதைப் புத்தகமாக வெளியிட்டபோது ஆங்காங்கே குறைத்தும் மாற்றியுமிருந்தால் புத்தகத்தின் சுவை இன்னும் அதிகமாகும்.

கதைப் புத்தகங்களைப்பற்றி இவ்வளவு சொல்லவேண்டுமா? இன்றைய தமிழ்நூல் வெளியீட்டின் போக்கு பொதுவாகப் பொழுதுபோக்கு அல்லது கதைப் போக்காக இருப்பதனால் இவ்வளவு தூரம் சொல்ல நேர்ந்தது. வெறும் கதை வெளியிடுவதற்கென்றே எத்தனையோ வெளியீட்டாளர் உள்ளனர். இதுவே இன்றைய காலப்போக்கு. ஆனால் ஓரளவுக்குக் காலப்போக்கை எதிர்த்துச்செல்ல எண்ணுவோரும் இருக்கிறார்கள். இவர்கள், பொழுது போக்குக்காகப் புத்தகம் வெளியிடுவதைக் குறைத்துக் கொள்வோம், புதிய புதிய செய்திகளையும் உண்மைகளையும் தெரிவித்து, மக்களின் அறிவு வளர்ச்சிக்கு இயன்றவரை துணைசெய்வோம் என்ற எண்ணங் கொண்டவர்கள்.

சக்தி காரியாலயத்தார் இவ்வகையைச் சேர்ந்தவர்கள். சோவியத் ருஷ்யாவைத் தொடர்ந்து, ரூஸ்ஸோ சரித்திரம், ரூஸ்ஸோ எழுதிய சமுதாய ஒப்பந்தம், கார்ல் மார்க்ஸ் சரித்திரம் ஆகிய நூல்களை வெளியிட்டார்கள். சமதர்மம், பொதுவுடைமை என்ற சமுதாயக் கொள்கைகள் பரவி வருகின்ற இக்காலத்தில் அவற்றுக் கடிப்படையான செய்திகளை

யும் தத்துவங்களையும் மக்கள் உணர்வதற்கு இப்புத்தகங்கள் சிறந்த துணையாகும். இவற்றை எழுதுவதற்கு ஓயாது சிந்தித்து அயராது உழைக்கவல்ல வெ. சாமிநாத சர்மா அவர்கள், இவர்களுக்குக் கிடைத்தது ஓர் அரிய வாய்ப்பாகும்.

இவ்வாண்டிலே சக்தி காரியாலயத்தாரும் நவயுகப் பிரசுரலாயத்தாரும் கட்டுரைத் தொகுதிகள் சில வெளியிட்டுள்ளார்கள். கதையே படிக்கும் போக்கினின்றும் பொது மக்கள் சிறிதளவாவது மாறி வருகிறார்கள் என்பதற்கு இவ்வெளியீடுகள் அறிகுறியாகும்.

தமிழிசை இயக்கத்தின் விளைவாக புதிய தமிழ் இசைப் பாட்டுக்களும் பழைய இசைப் பாட்டுக்களும் புத்தக வடிவிலே வெளிவரலாயின.

அன்பு நிலையத்தார் சுத்தானந்த பாரதியாருடைய இசைநூல்கள் சிலவற்றை அழகாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரும் பல இசை நூல் தொகுதிகளை நல்ல முறையிலே சுரப்படுத்தி வெளியிட்டிருப்பது பெரிதும் பாராட்டற்குரியதாகும்.

நாமக்கல் இராமலிங்கம்பிள்ளையவர்கள் எழுதிய இசைத் தமிழ் (தமிழ்ப்பண்ணை) என்ற ஆராய்ச்சி நூலை இங்கே குறிப்பிட வேண்டியது அவசியம். இசைத் தமிழ் எப்படி எப்படி வளர்ந்து வந்தது என்பதை ஆதாரங்களோடு ஆசிரியர் தெளிவாக எழுதியிருக்கிறார். எளிய நடை.

இந்தத் துறையிலே மிக்க அருமையான அமைப்புடன் வெளிவந்தநூல் புதுமைப் பதிப்பகத்தாரின் தமிழ் இசைப் பாட்டுக்கள். அட்டையிலே நடராஜாவின் இனிமையான தாண்டவ உருவம் பார்க்க மகிழ்ச்சி பொங்கும். பசுமையான தோற்றம். உட்புறம், பதம், கீர்த்தனை அபிநயப் பாட்டு என்ற பாகுபாட்டில் அறுபது இசைப்பாடல்கள், யாவும் பழைய பாடல்கள். சுற்றிலும் சிவப்புக்கோடிட்டு இடையில் பாடல்களை அமைத்திருப்பது மிக்க அழகுபெற்று விளங்குகிறது. டி. கே. சி. அவர்கள் ஒவ்வொரு பாடலுக்

கும் முன்னல் பாவ விளக்கமும், கீழே அடிக்குறிப்பும் எழுதியிருப்பது, பாகவதர்கள்கூடப் பாடலின் பாவம் இன்னதென்று அறிந்து பாடத் துணைசெய்யும். வித்துவான் கீவளூர் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் செய்த சுர அமைப்பு கடைசியில் தனியே அச்சிடப்பட்டுள்ளது. பாட்டுப் புத்தகங்களை எப்படி அச்சிடவேண்டும் என்று பலரும் இப்புத்தகத்தினிடமாக அறிந்துகொள்ளவேண்டும் என்று சொன்னல் அது மிகையல்ல.

புதுமைப் பதிப்பகத்தாருடைய மற்ருெரு நூலாகிய மாணவருக்கு (காந்தியடிகள்) என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். இந்தக் காலத்திலும் இப்படிப் புத்தகம் வெளியிடமுடியுமா என்ற அச்சம்தான் யாருக்கும் ஏற்படும். நல்ல காகிதம், நல்ல அச்சு, நல்ல மொழிபெயர்ப்பு. காந்தியடிகளின் கருத்துக்கள் நல்ல உருவுடைய புத்தக வடிவிலே தமிழரிடையே பரவுதல் வேண்டும் என எண்ணுவோர் இதனினும் சிறந்த பதிப்பை எதிர்பார்க்கமுடியாது.

பண்டைய இலக்கியப் பதிப்புக்களும் இவ்வாண்டில் சில வெளிவந்துள்ளன. சைவ சித்தாந்த மகா சமாஜக் காரியதரிசியான ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் துணிந்து வெளியிட்ட வைஷ்ணவ வேதமாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தம் அடக்கவிலைப் பதிப்பு கிடைத்தற்கரிதோர் அழகிய வெளியீடு. எண்ணூறு பக்கமுள்ள இந்நூலை நல்ல காகிதத்தில் அச்சிட்டு காலிகோ கட்டிடம் செய்து இந்த 1943 ஆம் வருஷத்தில் ஒன்றே முக்கால் ரூபாய்க்குக் கொடுத்தாரென்ருல் இவருடைய பக்தியையும் சிரத்தையும் என்னவென்று போற்றுவது! (அடுத்தாற்போல் ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருவாசகத்துக்கு இப்படி ஒரு பதிப்புப் போட்டுத் தருவார்களா?)

பாட்டியல் என்ற இலக்கணப் பிரிவைக் கூறும் நூல்களுள் ஒன்ருகிய நவநீதப் பாட்டியல் என்ற அரிய நூல் இதுவரையில் முழுதும் அச்சாகாமல் இருந்தது. இதற்குப்

புதிதாக உரை எழுதுவித்து பிற குறிப்புக்களோடு இவ்வாண்டில் ராவ்சாகிப் வையாபுரிப் பிள்ளையவர்கள் இதை மயிலை தமிழ்ச் சங்க வெளியீடாகப் பதிப்பித்திருக்கிறார்கள். பண்டைய இலக்கியத் துறையிலே இவ்வாண்டில் வெளிவந்த முக்கியமான நூலென்று இதைக் கூறவேண்டும். காலஞ்சென்ற டாக்டர் ஐயரவர்கள் நெடுங்காலமாகத் தமிழ் நூற்களை பதிப்பித்து வெளியிட்ட பழக்கம் விட்டுப் போகாமல், அவர்களுடைய குமாரர் கலியாணசுந்தரமையரவர்கள் திருக்கழுக்குன்றக் கோவை வெளியிட்டிருப்பது பாராட்டற்குரியது. ஸ்ரீ இராமகிருஷ்ண மடாலயத்தார், ஆழ்வார், நாயன்மார் பாசுரங்களிலிருந்து ஐந்நூறு பாக்களைத் திரட்டி விரிவான உரையோடும் பக்திநெறி பற்றிய அரிய முன்னுரையோடும் திரு அருள் மொழி என்ற பெயரோடு வெளியிட்டிருக்கிறார்கள். சமரச நோக்கோடு சைவ வைணவப் பாசுரங்களிலிருந்து சுவையான அருட்பாத் திரட்டொன்று இதுகாறும் தொகுக்கப்பெறவில்லை, என்ற குறையை இந்நூல் போக்கிவிட்டது. இந்நூலின் இறுதியில் நாயன்மார், ஆழ்வார், பாசுரங்களிலிருந்து பொருட்பொலிவும் சொற்பொலிவும் பெற்ற தொடர்களை எடுத்து சிவசகஸ்ரநாமம், விஷ்ணு சகஸ்ரநாமம் என்ற வழிபாட்டுக் கேற்ற பெயர்களை அமைத்திருக்கிறார்கள். தெய்வ வழிபாடு யாவும் தமிழிலேயே நிகழல் வேண்டும் என்ற நோக்கமுடையாருக்கு இவ் விரு தொகுதிகளும் பெருவிருந்தாக அமையுமென்பதில் ஐயமில்லை.

தமிழ்ப்புத்தகம் என்றவுடனே நம் எண்ணம் இந்தியாவின் தென் எல்லையோடு நின்றுவிடுகிறது. ஆனல் அதற்கப்பாலும் - இலங்கையிலும் தமிழர் இருக்கிறார்கள். நல்ல முறையிலே தமிழை அவர்கள் வளர்க்கவும் செய்கிறார்கள். அந்நாட்டுத் தனலக்குமி புத்தகசாலையார் வெளியிட்டுள்ள ஏழு புத்தகங்களில் மூன்றை இங்குக் குறிப்பிடலாம். முதலாவது சிவசம்புப் புலவர் பிரபந்தத் திரட்டு. ஆங்

காங்கே அவ்வப்போது வாழ்ந்துவந்த புலவர்களின் பாடல் களைத் தொகுத்து வெளியிடுவது ஒரு நல்ல தமிழ்த்தொண்டு. ஈழநாட்டுப் புலவர் சரிதம் என்பது மற்ருெரு நூல். தமிழிலக்கிய சரித்திரத்தில் ஈழநாட்டுப் புலவர்களுக்கும் இடமுண்டு. அவர்கள் வரலாற்றைக் கூறும் இந்நூல் பெரிதும் பாராட்டற் குரியதாகும். இவ்வாறே தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சிறு நிலப்பிரிவு சம்பந்தமாகவும் புலவர் சரிதங்கள் வெளிவருமானுல் தமிழிலக்கிய சரிதம் அமைக்கும் வேலை எவ்வளவோ எளிதாய்விடும்.

இவர்களுடைய மூன்ருவது நூல் மிக்க சுவையுடையது. இது சுத்த போசனபாக சாத்திரம் என்பது. போசனச் சுவையை விரும்பாதார் யார்? பயனுள்ள தமிழ் நூல்கள் பலதுறையிலும் வெளிவருதல் வேண்டும். உண்டி சமைத்தல் என்பது இதற்கு விலக்கன்று. எனவே இத்துறையில் நூல் வெளியிட்ட புத்தகசாலையாரை நாம் பாராட்டுகின்ருேம்.

இவ்வாண்டிலே சில நாடகங்கள் எழுதப் பெற்று வெளிவந்திருக்கின்றன. டி. கே. எஸ். கம்பெனி என்ற நாடகக் குழுவினர் தாங்கள் நடித்துவரும் நாடகங்களாகிய ஔவையார், பர்த்ருஹரி என்ற சரித்திரங்களை நாடகமாக வெளியிட்டிருக்கிருர்கள். இரண்டும் நல்ல முறையிலே அமைந்துள்ளன. தனியாக இலக்கியம் என்ற முறையிலே படிப்பதற்காக மட்டும் சில நாடகங்களை கலைமகள் காரியாலயத்தாரும், சக்தி காரியாலயத்தாரும் வெளியிட்டிருக்கிருர்கள்.

சினிமாத் துறையிலும் இவ்வாண்டிலேதான் முதன் முதலாக நூல்கள் எழுந்துள்ளன. இவை ஏ. கே. செட்டியார் எழுதிய திரையும் வாழ்வும் (தமிழ்ப்பண்ணை), பி. எஸ். ராமையா எழுதிய சினிமா (ஜோதி நிலையம்) என்னும் இரண்டுமாகும். முன்னது பல நாடுகளிலுமுள்ள திரைவாழ்வின் நிலையை ஒருவாறு சுட்டிக்காட்டி நமக்குச்

சிந்தனைக்கு வழிகாட்டுகிறது. பின்னது சினிமாப் படமெடுக்கும் வேலையை ஆதிமுதல் அந்தம்வரை தெளிவாகக் கூறுகிறது. இரண்டும் இத்தொழிலில் பயிற்சி உள்ளோரால் எழுதப்பெற்ற நல்ல நூல்கள்.

தத்துவ நுராய்ச்சி பற்றிய நூல்களைக் குறிப்பிட வேண்டுமானால் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் எழுதிய 'அச்சமில்லை' (தமிழ்ப் பண்ணை) என்ற சிறு நூலைச் சொல்லவேண்டும். நூலல்ல, கட்டுரை என்றே இதைச் சொல்லலாம். அவ்வளவு சிறியது. ஆயினும் இதனுள் கடவுள், உயிர், வாழ்க்கை பற்றிய வேதாந்தக் கருத்துக்களையும் முடிவையும் பாமர மக்கள் நன்ருய் புரிந்து கொள்ளும்படி ஆசிரியர் எவ்விதச் சிக்கலும் இல்லாமல் விளக்கி இருப்பது பாராட்டுதற்குரியது.

இத்தனைப் புத்தக வெளியீட்டாளர்களுக்கும் சம்பந்தமில்லாமலே ஒரு நல்ல வெளியீட்டுக் காரியம் நடந்து வருகிறது. தமிழ்நாட்டுக் கோயில்களுக்குக் கணக்கே இல்லை. அந்தந்தக் கோயிலின் அமைப்பு, சரித்திரம், கல்வெட்டுக்கள் திருப்பணிகள், திருவிழாக்கள், தலத்தைப் பற்றிய நூல்கள் முதலியனபற்றிய குறிப்புக்கள் அடங்கிய தலவரலாறுகள் (சாது அச்சுக்கூடம்) பல தொடர்ச்சியாகக் கோயில்களிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கின்றன. தலங்களைப் பற்றி அறிந்துகொள்ள விரும்பும் பக்தகோடிகளுக்கு மட்டுமேயன்றி, எல்லோருக்குமே இவை பயன்படுவனவாகும்.

1943இல் வெளிவந்த தமிழ்ப் புத்தகங்களைப் பற்றிச் சுருக்கமாக இவ்வளவுதான் கூறமுடியும். இந்தப் போரின் விளைவாக பிற நாடுகளிலே மக்கள் மனம் சிந்தனையைத் தூண்டும் புத்தகங்களிலேயே சென்றிருக்கிறது. உதாரணமாக சண்டை தொடங்கியவுடன் ருஷ்ய நாட்டிலே கதைகளும் நாவல்களும் குறைந்துபோயின. கலை, தத்துவ ஆராய்ச்சி, சமயம் ஆகியவை பற்றிய நூல்களே தோன்ற

07, 6 NAVI,P
N57



லாயின. இவற்றையே அந்நாட்டு மக்கள் விரும்பலாயினர். போரின் கொடுமையை எண்ணும்போது வாழ்க்கையையே சாமானியமென்று ஒதுக்கிவிட்டு இதைப் பிரதிபலிக்கும் கதைக்கும் நாவலுக்கும் அந்நாட்டு மக்கள் விடைகொடுத்து விட்டார்கள்.

ஆனால் தமிழ்நாட்டில் நிலைமை என்ன? கதைக்கும் நாவலுக்கும்தான் இப்போது கொண்டாட்டம். இவற்றிலாவது விஷயமோ சுவையோ இருக்கிறதா? பழைய இலக்கியங்களிலும் இதிகாசங்களிலும் சரித்திரங்களிலும் இன்றைய கதைகளைவிடச் சிறந்த கதைகளும் கற்பனையும் அமைந்துள்ளன. பாரதக் கதை, பஞ்சதந்திரக்கதை, இதோபதேசக் கதை, பிறகு புறநானூற்றில் அடங்கிய கதைக் குறிப்புக்கள்; குறுந்தொகை போன்ற நூல்களில் உள்ள பாடல்கள், ஒவ்வொன்றுக்கும் அடிப்படையாயுள்ள நிகழ்ச்சி, ஒவ்வொன்றும் தனியான ஒரு பெருங்கதை. இக்காலத்துக் கதைகளை இவற்றுக்குச் சமமாகச் சொல்லவே இடமில்லை.

மொழிபெயர்ப்பு என்று வந்தால் அதில் எவ்வளவு போட்டி! ஒரே கதையை எத்தனை பேர் மொழிபெயர்க்கிறார்கள்? ஒரே நாவலை எத்தனை பேர் மொழிபெயர்த்து வெளியிடுகிறார்கள்? இந்தப் போட்டாபோட்டி தமிழின் வளர்ச்சியையா காட்டுகிறது?

யுத்தத்தின் போக்கு தமிழ்ப் புத்தக உலகத்தை இப்படி மாற்றிவிட்டது என்றால் அதற்கு அரசியலும் ஒரு காரணந்தான். ருஷ்ய நாட்டிலிருக்கும் சுதந்திர அரசியல் இங்கு இல்லையே?

ஆயினும் கதைப் போக்கினின்றும் விலகுவதற்கான அறிகுறிகள் ஆங்காங்குத் தோன்றுகின்றன. இவற்றை நாம் வரவேற்று, இவை மேலோங்கிவர உதவுவோமாக. அடுத்த ஆண்டிலேனும், வேறு பல துறைகளில் புத புது நூல்கள் தோன்றுமென்று எதிர்பார்ப்போம்.



TAMIL NADU ARCHIVES
110414

## ஆதாரக் கல்விக்கான புத்தகங்கள்

| | | ரூ | அ. |
|---|---|---|---|
| வாழ்க்கைக்கான கல்வி—ஆர்ம்ஸ்ட்ராங் | ... | 0 | 7 |
| இன்றைய பேச்சு : ஆதாரக் கல்வி —ஆசாரிய கிருபலானி | ... | 2 | 0 |
| சுயராஜ்ய சாஸ்திரம்—வினோபா பாவே | ... | 2 | 0 |
| அழிவற்ற வாழ்வு—குமரப்பா | ... | 2 | 8 |
| நமக்கேற்ற உணவு—டாக்டர் குருபாதம் | ... | 0 | 10 |
| பிரார்த்தனைப் பாடல்கள் | ... | 1 | 4 |
| ஆதாரக் கல்விக்குச் சோதனை | ... | 0 | 10 |
| ஆதாரக் கல்வி : தத்துவமும் வேலை முறையும் —மார்ஜரி சைக்ஸ் | | 0 | 12 |
| உணவுப் பஞ்சம் | ... | 1 | 8 |

## பாடசாலைக்கேற்ற வாசக புத்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| தம்பி, உனது பல் | ... | 0 | 6 |
| தம்பி, உனது தோல் | ... | 0 | 5 |
| கலை | ... | 0 | 4 |
| ஈ | ... | 0 | 5 |
| வயல்கரை | ... | 0 | 6 |
| என்ன உண்பது ? | ... | 0 | 6 |
| சிறுவர்க்கான பாடல் | ...(அச்சில்) | | |

## ஆசிரியர் துணைப் புத்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| ஆதாரத் தொழில்- நூற்றல்—வினோபா பாவே | .. | 1 | 0 |
| முதல் வகுப்பு ஆசிரியர் | ... | 1 | 8 |
| பாடசாலை நோய்கள் | ... | 1 | 8 |
| தோட்ட வேலை ஆசிரியர் | ... | 2 | 0 |
| ஆதாரக் கல்வி என்றால் என்ன?—(3ம் பதிப்பு) | ... | 1 | 8 |

## தோட்ட வேலை

| | | | |
|---|---|---|---|
| பழத் தோட்டம் | ... | 10 | 0 |
| காய்கறித் தோட்டம்—(3ம் பதிப்பு) | ... | 5 | 8 |
| வாழைத் தோட்டம் | ... | 1 | 12 |
| சீமைத் தக்காளி பயிரிடுதல் | ...(அச்சில்) | | |

**காந்தி வித்தியாலயம்**

**திருச்சிற்றம்பலம் - குத்தாலம் ரயில்**